# செந்தமிழ்ச் செல்வி



## உள்ளுறை



சிலம்பு-௫௩] வள்ளுவர் ஆண்டு ௨௦௦௯, கார்த்திகை Dec, 78 [பரல்-௪

# ‘செந்தமிழ்ச் செல்வி’

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---



## “செந்தமிழ்ச் செல்வி”

ஆண்டுக் கையொப்பம்
(Subscription Rates)

உள்நாடு ரூ. 12 00 வெளிநாடு ரூ. 20 00

ஆயுள் கையொப்பம்

உள்நாடு ரூ. 120 00 வெளிநாடு ரூ. 200 00

# செந்தமிழ்ச் செல்வி

## திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫௩ | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௦௯, கார்த்திகை<br>திசம்பர் 1978 | பரல் ௪ |
|---|---|---|


## திருக்குறட்பணியும் பல்கலைக்கழகங்களும்

உலகப் பொதுமை வாய்ந்த ஒப்புயர்வற்ற உயர்தனிச் சிறப்புடையதெனப் பன்னாட்டுப், பன்மொழி வல்லுநர்களும், பல்துறைப் பேரறிஞர்களும் ஒருமுகமாகப் பாராட்டும் பெருமையுடையது நம் அருமைத் தமிழில் அமைந்து விளங்கும் திருக்குறள் என்பது யாவரும் அறிந்ததே. உலக அரங்கில் தமிழ்மொழி, தமிழினம், தமிழ்நாட்டுப் பெருமைகளைக் குறிப்பாகப் புலப்படுத்தும் சிறப்பில் முப்பால் நூலிலும் மிக்க பிறிதொன்று எப்பாலுமில்லை. உலக ஒற்றுமைக்கும், உயரிய பண்பாடும் நாகரிகமும் வாய்ந்த சீரிய வாழ்க்கையமைப்புக்கும் வழிவகுக்கும் ஒருபெருங் கருவியாகத் திகழ்வதும் பெருநாவலரின் திருவாய்மொழியேயாம். காலமும் இடமும் பிறபிற கட்டுகளும் கடந்து நின்று கருத்தொளி பரப்பும் பெருவிளக்கம் தெய்வத்திறஞ்சால் பொய்யாமொழியே என்பதில் ஐயமில்லை.

‘அகர முதல’ எனத் தமிழ் நெடுங்கணக்கின் முதலெழுத்தில் தொடங்கிப் ‘பெறின்’ என இறுதி எழுத்தில் முடியுமாற்றான் தமிழின் வளனும் நலனுமெல்லாம் ஒருங்குதிரண்டு விளங்கும் பெருஞ்சிறப்புடையது திருக்குறள் என்பது கொள்ளப்படும். கால வெள்ளத்தால் அழிந்துபட்டனவும் பகைவர் கள்ளத்தால் அழிக்கப்பட்டனவும் போக, இன்று நம் கைக்குக் கிட்டியுள்ள தமிழ் நூல்களுள் ‘திரு’ என்னும் அடைமொழியைப் பெற்ற முதல்நூல் திருக்குறளே; திருப் பெற்ற முதற் பாவலரும் முதற்பாவலரே. இங்ஙனம் திருக்குறளின் சிறப்புக்களையெல்லாம் வகுத்துரைக்கப் புகுந்தால் வரம்பின்றி நீளும்.

எப்படி நோக்கினும் ஒப்புயர்வற்ற விழுமிய ஒருபெருந் தமிழ் நூலை, ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னமே, உரிமைப் பெட்டகமாகப்

பெற்றிருந்தும், நம் தமிழ்மக்கள் அதனைப் பழுதறப் பயின்று கடைப்பிடித்தொழுகி மேம்பாடடையவும், உலக முழுதும் இலகொளி பரப்ப ஏற்றன செய்து ஏற்றமிகு புகழும் பயனும் எய்திச் சிறப்புறவும் மாட்டாதவராய் இருப்பது பெரிதும் வருந்தத்தக்கது. இதுவும் ஒருவகைத் தீயூழே போலும் !

தமிழ் நூல்களுள் அதிக எண்ணிக்கையுடைய உரைகளைக் கொண்டது திருக்குறளே. பழைய உரைகள் பல உளவேனும் மேலும் மேலும் புத்துரைகள் பல தோன்றிக்கொண்டே இருக்கின்றன; விளக்க நூல்கள், ஆராய்ச்சி நூல்கள், திருக்குறளை அடிப்படையாகக் கொண்ட இலக்கியங்கள் முதலியன வெளிவந்து கொண்டிருக்கின்றன. பல்வேறு வடிவங்களில் மிகுதியான பதிப்புகளைக்கொண்ட தமிழ்நூல் திருக்குறளே.

1968இல் பேரறிஞர் **அண்ணு அவர்கள்** தமிழ்நாட்டரசின் முதலமைச்சராக இருந்தபோது, சென்னையில் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டில் எஞ்சிய தொகை உருவா ஒன்பது இலக்கத்தைச் சென்னை, அண்ணுமலை, மதுரை என்னும் மூன்று பல்கலைக்கழகங்கட்கும் உருவா மூன்று இலக்கம்மேனிப் பிரித்துக்கொடுத்துத் திருக்குறள் ஆராய்ச்சிக்கு ஆவன செய்யப்பட்டுள்ளன. அதன்படி முப் பல்கலைக் கழகங்களிலும் 'திருக்குறள்' ஆய்வுக் களங்கள் (chairs) நிறுவப்பட்டுச் செயலாற்றி வருகின்றன.

கலைஞர் **கருணநிதி** அவர்களை முதலமைச்சராகக் கொண்ட மேனுள் தமிழ்நாட்டரசு வையகப் புதுமையாகக் கொள்ளத்தக்கவாறு **வள்ளுவர் கோட்டம்** எழுப்பி அழியாப்புகழ் பெற்றது.

ஆசிரியர் மறைத்திரு **மறைமலையடிகளார்** வகுத்த திருவள்ளுவர் ஆண்டுமுறை உண்மைத் தமிழ்ப்பற்றுளர்களால் கடைப்பிடிக்கப் பட்டு வருகின்றது.

திருவள்ளுவர் பெயரிலும் திருக்குறள் பெயரிலும் கழகங்கள், மன்றங்கள் முதலியன ஆங்காங்கு நிறுவப்பட்டுள்ளன. மாநாடுகள், கருத்தரங்குகள், கலை நிகழ்ச்சிகள் முதலியன நிகழுகின்றன. திருக்குறளில் தனித்திறம் பெற்ற அருங்கலை வாணரும் சிலர் உளர்.

மேற்கூறியனவெல்லாம் தமிழிலும், தமிழ் நிலப்பகுதியிலும் அமைந்தனவேயன்றி உலகெங்கணும் திருக்குறளைப் பரப்பவும், உலகெலாந் திருக்குறளை ஓதியுணர்ந்து தெளிந்து சிறக்கவும் போதுமானவையல்ல என்பது வெளிப்படை.

விவிலியமும், குரானும் உலகில் பெருவாரியான மொழிகளில் பெயர்க்கப் பட்டிருப்பினும், அவை அவ்வம் மதத்தினர் போல மற்றையோராலும் போற்றப்படும் பொதுச் சிறப்பினவல்ல. திருக்குறளோ அறிவுடையோர் அனைவராலும் போற்றப்படும் பொதுச்

சிறப்பும், தனிப்பெருமையும் உடையது. ஆகவே, நம்பிக்கை அடிப்படையிலமைந்த மதச்சார்பென்னும் பக்கத்துணையின்றி, அறிவாராய்ச்சி மாட்சிமையுடையதாய் உலகிலேயே அதிக மொழிகளில் பெயர்க்கப்பட்டிருக்கும் ஒரே நூல் திருக்குறளேயாம். இப்படி நாம் ஒருவாறு பெருமைப்படலாம் என்றாலும் அது திருக்குறளின் சிறப்பை நோக்கின் நிறைவடையத் தக்கதன்று.

இத்தாலி நாட்டினின்றும் கிறித்தவ மதத்தைப் பரப்பும் நோக்கோடு தமிழ்நாடுற்ற அறிஞர் வீரமாமுனிவர் (கான்சுதந்தீன் நோபிள் பெஃச்கி) 1747இல் திருக்குறளில் அறம் பொருள் என்னும் இரு பால்களை மட்டும் இலத்தீனில் மொழிபெயர்த்தார். பெயர்ப்பினும், அது நூல் வடிவம் பெறவில்லை. 1886இல் திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்ட பேரறிஞர் போப்பு அவர்கள் தமது நூலின் பின்னிணைப்பாக, முனிவரின் இலத்தீன் மொழிபெயர்ப்பை வெளியிட்டார். 1820இல் ஒரு பகுதியும் 1896 இல் திருக்குறள் முழுமையும் செருமனில் மொழிபெயர்த்து வெளியிடப்பட்டன. 1876இல் திருக்குறள் பிரஞ்சு மொழிபெயர்ப்பு வெளிவந்தது. இவ்வாறே மற்றும் பற்பல மொழிகளில் திருக்குறள் மொழிபெயர்க்கப்பட்டது. கழக ஆட்சியாளர் அவர்கள் 'திருக்குறட் பணியே கழகத்தின் தனிப்பெரும் பணி' என்னும் தொடர்கட்டுரையில் (செந்தமிழ்ச்செல்வி சிலம்பு 48; பரல் 5) இது பற்றிய செய்திகளை விளக்கி எழுதியுள்ளார்கள். விளக்கம் வேண்டுவோர் அதிற்கண்டு கொள்க.

ஆங்கிலந்தவிர ஏனைய மொழிகளில் வெளிவந்த திருக்குறள் மொழிபெயர்ப்புகளெல்லாம் பெரும்பாலும் விற்பனைக்குக் கிட்டுதல் அரிது. திருக்குறள் வங்காள மொழிபெயர்ப்பு அச்சிடப்பட்டு வெளிவந்துள்ளதாயினும் அது விற்பனைக்கு எங்கும் கிட்டாமையால் கல்கத்தா நூல்நிலையத்திலிருந்த ஒரேயொரு படியினைக் கொண்டு அதன் முகப்பு முன்னுரை முதலதிகாரப் பகுதிகளை மட்டும் நிழற்படம் எடுத்துக் கொணர்ந்து, அது மறைமலையடிகள் நூல்நிலையத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளது.

மேற்கூறிய மொழிபெயர்ப்புகளும், பிறவுமெல்லாம் பாவடிவில் அல்லது சுருக்கமான உரைநடையில் அமைந்தனவேயாம். இவற்றால் பெரும்பயன் விளையும் என்று நாம் எதிர்பார்க்க வியலாது. ஓதற்கு எளியதாயினும் உணர்தற்கு அரியதாதலால் திருக்குறள் தோன்றிய தமிழ்நாட்டிலேயே, தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட நம்மவர்களே, தமிழில் சிறந்த புலமை இல்லாவிடின் திருக்குறட்பாக்களையோ சுருக்கமான உரைவடிவையோ கொண்டுமட்டும் அதன் நயத்தையும், நலத்தையும் முழுமையாக

உணரமுடியாதென்பது உறுதி. அவ்வாறிருக்க, வேற்றுநாட்டவர்கள் மேற்கூறியாங்குப் பா வடிவிலோ சுருக்கமான உரைநடையிலோ அமைந்த மொழிபெயர்ப்புக்களைக் கொண்டு திருக்குறளின் சொற்பொருள்கள் நுட்ப திட்ப மாட்சிமைகளை அறிந்துணர்ந்து கொள்ளுதல் இயலுமோ?

திருக்குறளைப் பிறமொழிகளில் பெயர்ப்பதோடன்றிக் கூடுமானவரையில் அதன் திட்ப நுட்பச் சொற்பொருள் நயங்களையும், பிற பிற நலங்களையும் தெளிவும் விரிவும் பொருந்திய விளக்கவுரைகளுடன் வெளியிடுதல் வேண்டும்.* மேலும் அவ்வம் மொழிகளில் சிறந்து விளங்கும் சீரிய நூல்களிலிருந்தும், உலகப் புகழ் வாய்ந்த பலதுறைப் பேரறிஞர்கள் இயற்றிய உயரிய நூல்களிலிருந்தும் மேற்கோள் காட்டியும், ஒப்புமை தெரித்தும், வேறுபாடு மாறுபாடுகளை விளக்கியும், தனிச்சிறப்புப் புலப்படுத்தியும், ஆங்காங்கு வழங்கும் உலக வழக்கான அரிய நிகழ்ச்சிகள் செய்திகளோடு பொருத்தி யுரைத்தும் அரிய பெரிய நூல்கள் உருவாக்கப்பட்டாலன்றிப் பொய்யாமொழியின் சிறப்பை வையகமுற்றும் உணர்தல் அரிது. திருக்குறள் எத்தனை மொழியில் எத்தனை பதிப்புகள் வெளிவந்துள்ளனவென்று எண்ணளவை நீட்டிக்காட்டலாமேயல்லாது உண்மைப் பயன் காணவியலாது.

தமிழ்நாட்டின் மேனாள் முதலமைச்சர் பேரறிஞர் அண்ணா அவர்கள் மதுரைப் பல்கலைக் கழகத்தின் முதற்பட்டமளிப்பு விழாவில் தாம் நிகழ்த்திய பேருரையில் அப் பல்கலைக்கழகம் எத்தகைய பணியில் சிறப்பாக ஈடுபடவேண்டும் என்று விருப்பம் தெரிவித்துள்ளார்கள். அது வருமாறு:

> "எல்லாம் பிறநாடுகளிலே உள, நம் நாட்டிலே ஏதுமில்லை என்ற பிச்சை மனப்பான்மை செத்தொழிந்து, எமக்கு ஈந்திடுக என்று எந் நாட்டவரும் கேட்டுப் பெற்றிடத்தக்க, ஏற்புடைய எண்ணக்குவியல் எம்மிடம் உண்டு; அது மாசு படிந்த மணிபோல, மங்கியதோர் ஓவியம் போல உள்ளது; மாசு துடைத்திடுவோம், மணியொளியைக் காட்டிடுவோம் என்று எழுச்சியுடன் கூறத்தக்க விழிப்புணர்ச்சி மேலோங்கியுள்ள காலம் இது; அதனைச் செவிலித்தாயாகப் பெற்றுள்ளது இம் மதலை—மதுரைப் பல்கலைக்கழகம்.

---

*அறிஞர் எல்லிசு அவர்களின் ஆங்கில மொழிபெயர்ப்பு சற்று விரிவான விளக்கங்களுடையதாயினும் அதன்கண் பெரும்பாலும் தமிழ் நூல் மேற்கோள்களும் சிறுபான்மை வடமொழி நூல் மேற்கோள்களுமே காட்டப்பட்டிருத்தலால் அதுவும் பெரும்பயன் அளிக்கும் நிலையில்லை.

எனவே இதற்கென்று ஒரு தனித்தன்மை, இதற்கென்று ஒரு தனிப்பாதை இருத்தல் வேண்டும். இந்தப் பல்கலைக் கழகம், தமிழகத்துக் கருத்துக் கருவூலந்தன்னை உலகு காணு தற்கான வழிவகுக்கும் கோட்டமாகி, புலி பொறித்தான், கயல் பொறித்தான், ஆரியப்படை கடந்தான், கங்கைகொண்டான், கடாரம் வென்றான் என்றெல்லாம் புல்லரிக்கும் வரலாற் றினைப் படிக்கின்றோமே, அதற்கு ஒப்ப, குறளளித்தார், மேகலை ஒளிதந்தார், அகமும் புறமும் அறிவித்தார் என்று அவனியிலுள்ள நாடுகளில் வித்தகர் மெச்சிடத் தக்க புது வரலாறு சமைத்திடுதல் வேண்டும். அதற்கேற்ற அணி வகுப்பைத் திரட்டுதல் இந்தப் பல்கலைக்கழகத்தின் தனித் திறனாய் அமைந்திடுதல் வேண்டும். இந்தத் தனிநோக்கம் கொண்டிடுதல் மிக நன்று. உரியவர்கள் இதுபற்றி ஆய்ந் தறிதல் வேண்டும். விருப்பம் உரைக்கின்றேன், வடிவம் கொடுத்திடும் பொறுப்பில் உள்ளோர் செய்திடுவர் என்னும் ஆர்வங்கொண்டு.''

அறிஞர் அண்ணா அவர்களின் விருப்பம் திருக்குறள் அளவி லேனும் மதுரைப்பல்கலைக் கழகத்தில் நிறைவேறும் நிலையில்லை. இனியமையவிருக்கும் திருச்சி, கோவைப் பல்கலைக் கழகங்களிலே னும் நிறைவேறும் என்று எதிர்பார்த்தற்கான அறிகுறியொன்றும் புலப்படவுமில்லை.

தமிழ்நாட்டின் முப்பெரும் பல்கலைக்கழகங்களிலும் திருக்குற ளாராய்ச்சிக்காக உருவா ஒன்பது இலக்கத்தைத் தமிழ்நாட்டரசு பகுத்துக் கொடுத்திருப்பது பற்றியும், அவ்வப் பல்கலைக்கழகங் களிலும் 'திருக்குறள் ஆய்வுக்களங்கள்' நிறுவப்பட்டிருப்பது பற்றி யும் மேலே கண்டோம். அத் திட்டத்தின்கீழ்ப் பற்பல நூல்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. அந் நூல்களுள் பெரும்பாலன தொகுப்பு வேலைகளும், பதிப்பு வேலைகளுமாகவே இருக்கின்றன.

அவற்றில் சில சிறப்பான ஆய்வு நூல்கள் வெளிவந்திருப் பினும் அவை அந்நூலாசிரியர்களால் தனிப்பட்ட முறையில் படைக்கக்கூடியவையே. இத்திட்டத்தின் பெருமைக்கேற்றவாறு இன்னுஞ் சிறப்பான வழிகளில் ஆங்கிலத்திலும் பிறமொழிகளிலும் குறள் பற்றிய நூல்கள் உருவாக்கப்படுமாயின் நன்று.

திருக்குறளாராய்ச்சியை ஒரு பல்கலைக்கழகத்தில் மட்டும் வைத்துக்கொண்டு, ஏனையிரு பல்கலைக்கழகங்களிலும், இனி அமையவிருக்கும் பல்கலைக்கழகங்களிலும் நாம் மேலே சுட்டிக் காட்டிய போக்கில் திருக்குறட்பணிகள் அமைதல் நன்று. அரசு தனித்திட்டம் வகுத்துச் செயற்படினும் நன்றே.

இனி அயல்நாடுகளில் அவ்வம் மொழிகளில் நிறைந்த புலமையுடையாரைத் தேர்ந்து, அவர்கள் தமிழ்நாட்டுக்கு வந்து நம் பல்கலைக்கழகங்களில் தங்கித் தமிழ்மொழியைப் பழுதறப் பயின்று திருக்குறளில் சீரிய புலமைபெற வாய்ப்பளித்தும், தமிழில் நிறைந்த புலமையும் திருக்குறளில் சிறந்த அறிவும் வாய்ந்த நம்மவர்கள் பிறமொழிகளை நன்கு பயில வாய்ப்பளித்தும், வேண்டும் உதவிகளைக் குறைவறச் செய்தும் நாம் முன்னே கூறிய முறையில் திருக்குறளைப் பல்வேறு மொழிகளில் பெயர்ப்பதோடன்றி விரிவான விளக்கங்கள் எழுதுவித்து வெளியிடவும், பரப்பவும் ஆவன செய்தல் வேண்டும்.

உலகெங்கணுமுள்ள பல்கலைக்கழகங்களிலெல்லாம் திருக்குறள் ஆய்வுக்களங்கள் அமைத்தும், ஆங்காங்குள்ள மக்கள் எழுச்சி கொள்ளுமாறு சொற்பெருக்காற்றும் நாநலம் வாய்ந்த புலமையாளரையும், கலைவாணரையும் ஆங்காங்கு அனுப்பியும் திருக்குறள் பரவ உரியன செய்தல் வேண்டும்.

இவற்றை எண்ணின் மலைப்பாகத் தோன்றினும், அரசு அல்லது பல்கலைக்கழகங்கள் முறையாக முயற்சி மேற்கொண்டு முனைப்பாகச் செயற்படத் தொடங்கினால் நிறைவேறுதல் உறுதி. வள்ளுவர் கோட்டத்தின் விரிவுத்திட்டமாக **'திருக்குறட் பல்கலைக் கழகம்'** உருவாக வாய்ப்பு ஏற்படுமானால் மிகவும் நன்று.

> **"வரப்புயர நீருயரும்**
> **நீருயர நெல்லுயரும்**
> **நெல்லுயரக் குடியுயரும்**
> **குடியுயரக் கோனுயர்வான்"**

என்னும் ஔவைப்பெருமாட்டியின் அமுதமொழியே போல், தமிழின் சிறப்பும் திருக்குறளின் பெருமையும் உலகெங்கணும் பரவப்பரவ, வெளிநாடுகட்குச் செல்லும் நம்மவர்கள் நன்கு மதிக்கப்பெறுவர்; வெளிநாட்டவர்கள் நம்மவர்களோடு உறவாடுவதையும், தமிழ்நாட்டுக்கு வருகைதருவதையும் பெரும்பேருகக் கருதுவர்; வெளிநாட்டவர்களிடம் நாம் எத்தகைய பேருதவிகளையும் எளிதிற் பெறலாம்; பல்லாற்ருனும் வருவாய் மிகும்; வளம் பெருகும்; புகழ் ஓங்கும்!

ஆகவே தமிழ்நாட்டரசும் பல்கலைக்கழகங்களும் திட்டமிட்டுத் திருக்குறட்பணிகளில் முனைந்து ஈடுபடுமாறு வேண்டுகின்ருேம்.

———

# இந்திய நூலகத்துறை வளர்ச்சி*

கே: நம்நாட்டில் படிக்கும் பழக்கமுடைய நகர்வாழ் மக்களுக்கு ஓரளவு தேவையான நூலக வசதி உள்ளது. பல்கலைக்கழகம், கல்லூரி, பொது நூலகங்கள் இவர்கள் தேவையை ஓரளவு நிறைவேற்றுகின்றன. ஆனால், நம் நாட்டைப் போல வளர்ந்து வரும் பின் தங்கிய நாடுகளில் ஒரு பெரும் சிக்கல் உருவாகியுள்ளது. படிப்பறிவில்லாத கிராமப்புற மக்களுக்குச் சேவை செய்ய அதற்கேற்ற நூலகங்கள் இல்லை. நாட்டில் நலிவுற்றிருக்கும் கிராமப்புற மக்களுக்கு எல்லாவகையான உதவிகளையும் செய்ய வேண்டுமென்பது இன்றுள்ள அரசின் நோக்கம்.

இவ் வகையில் கேரள மாநிலத்தில் கிராமப்புற நூலகப் பணி மிகச் சிறப்பாக நடைபெறுகின்றது என்று குறிப்பிடலாம். இதற்கு இரு காரணங்கள் உண்டு. ஒன்று கேரளத்தில் படித்த மக்களின் தொகை அதிகம்; அறிவுத் துறையில் விழிப்புணர்ச்சி யுடையவர்கள் அதிகம். மற்றொன்று பொதுமக்களும் படித்தறிந்து கொள்ளும் வகையில் எளிய நூல்கள் மலிவான விலையில் அங்குக் கிடைப்பதாகும்.

கிராமப்புற மக்களுக்கு நூலகப்பணி செய்வதில் மற்றொன்றையும் கருத்தில் கொள்ளவேண்டும். நூலகம் என்பது வெறும் நூல்கள் மட்டும் இருக்குமிடமில்லை. இன்று திரைப்படம், புகைப்படம், இசைத்தட்டுகள் முதலானவையும் நூலகத்தில் இடம்பெற வேண்டும். படிப்பறிவு அற்ற மக்களிடையே அறிவைப் பெருக்க இத்தகைய கருவிகள் பெருந்துணை செய்யும்.

ஐ: கேரளத்தில் கிராமப்புற மக்களுக்குப் பயன்படக் கூடிய வகையில் நூலகப்பணி நடைபெறுகிறது என்பது உண்மை தான். ஆங்காங்குள்ள சில தனிப்பட்ட ஊக்கமுடைய சிலரால் இத்தகைய கிராமப்புற நூலகங்கள், மிகத் திறமையாக நடைபெற்று வருகின்றன. இருப்பினும் பொதுநூலகச் சட்டம் என்பது கேரளத்தில் நிறைவேறப் பெறுததால் பொது

---

* 'தேசிய வளர்ச்சியில் நூலகங்களின் பங்கு' என்ற தலைப்பில் 'இந்து' (27-11-78) நாளிதழில் வெளிவந்த கலந்துரையாடலில் சில பகுதிகள். உரையாடலில் பங்கு கொண்டோர். கே: திரு. பி. எஸ். கேசவன். ஐ: திரு. கே. சே. ஐசக் கி. திரு கிரிஜா குமார். திரு. டி. கே. எஸ். ஐயங்கார்.

மக்கள் தத்தம் ஊரிலுள்ள தனிப்பட்ட சிறு நூலகங்களில் உள்ள புத்தகங்களோடு மனநிறைவு பெற வேண்டியுள்ளது. மாநில நூலகம், மாவட்ட நூலகம், கிளை நூலகங்கள் என்பன போன்ற அமைப்புக்கள் இருக்குமானல் கேரள மக்கள் இன்னும் சிறப்பான நூலகப் பணியைப் பெறுவர்.

நகர்ப்புற மக்கள் கல்வி நிலையங்களின் நூலகங்களினுல் பேருதவி பெறுகின்றனர் என்பது உண்மையாயினும் பள்ளி நூலகங்கள் நம்நாட்டில் எந்த மாநிலத்திலும் செம்மையாக நடைபெறவில்லை என்பதை நாம் உணரவேண்டும். பள்ளி நூலகங்களை உருவாக்குவதில் நாம் அதிகக் கவனம் செலுத்த வேண்டும். ஏனெனில் சிறுவர்கள் நூலகப் பழக்கத்தையும் நூல்கள் படிக்கும் பழக்கத்தையும் அங்குத்தான் பெறமுடியும். இன்று நாட்டுமக்களிடையே படிக்கும் பழக்கம் பெருமளவு இல்லாததற்குக் காரணம் இளமையிலேயே அவர்கள் இத்தகைய பயிற்சியைப் பெருமைதான்.

கே: கிராமப்புற மக்கள் சீரான நூலக உதவிபெற நூலகச் சட்டம் தேவைதான். ஆனுல், வறுமையும் பற்ருக்குறையும் மிகுந்த நம் நாட்டில் இச் சட்டத்தினுல் போதிய பணம் சேர்க்க முடியாது. இது நூலகப்பணி நடைபெறப் பெரு மளவில் பயன்படாது.

கி: இந்த நாட்டில் நூலக வளர்ச்சி கடந்த முப்பது ஆண்டு களில் ஏற்பட்டுள்ளது என்று குறிப்பிட்டாலும் அது சரி சமமான வளர்ச்சி என்று கூறமுடியாது. ஒருசில கல்வி நிறுவனங்கள் சிறப்பாகப் பணிபுரியலாம். ஆனுல், மொத்த மாகப் பார்க்கும்போது கல்லூரி, பல்கலைக் கழகங்களில் நடை பெறும் நூலகப்பணி மனநிறைவு அளிப்பதாக இல்லை.

கே: மக்களை மூவகையினராகப் பிரிக்கலாம்: படிப்பறியாத மக்கள், எழுதப்படிக்கத் தெரிந்தோர், உயர்கல்வி பெற்ருேர். நாம் எப்போதுமே மேலிருந்து கீழே செல்ல விரும்புகிருேம். நம்மிடம் நல்ல பல்கலைக்கழக நூலகங்கள் உள்ளன. சுமா ரான கல்லூரி நூலகங்கள் உள்ளன. பள்ளி, பொது நூலகங்கள் என்பவை பெயரளவில் உள்ளவை. இந் நிலையை மாற்றிச் சீரான வளர்ச்சி பெற நூலகச் சட்டம் தேவை. இதற்குத் 'தேசிய நூலகத் திட்டம்' ஒன்றை அரசு உருவாக்க வேண்டும்.

படிப்பறியாத மக்களுக்குப் பணி செய்யச் செவி—விழி வழிக்கல்வி தேவை. இதற்குத் திரைப்படம், புகைப்படம்,

இசைத்தட்டு போன்ற கருவிகள் இன்றியமையாதவை. முறைசாராக் கல்வித் திட்டமும் முதியோர் கல்வித் திட்டமும் இதற்குத் துணை செய்வன.

எழுதப் படிக்கத் தெரிந்தோர்க்கு உதவும் வகையில் இயங்கு நூலகங்கள் தேவை. நாடு முழுவதும் சிற்றூர்கள் தோறும் கிளை நூலகங்கள் இருக்க வேண்டும்.

உயர்கல்வி பெற்றவர்கள் தம்மை உயர்த்திக் கொள்வதில் ஈடுபடுகிறார்களே தவிர, நாட்டைப் பற்றிக் கவலைப் படுவதில்லை. நாட்டுமக்கள் முன்னேறத் துணை செய்வதில்லை. சாதாரண மக்களுக்குப் பயன்படும் வகையில் எளிய நடையில் இன்றியமையாத செய்திகளை நூல்களாக்கித் திட்டமிட்டுத் தருவதில்லை.

ஐ: 'தேசிய நூலகத் திட்டம்' என்பது மிகமிக இன்றியமையாததுதான். எல்லா வகையான நூலகங்களும், திட்டமிட்டபடி சரிசமமாக வளர்வதற்கு இத் திட்டம் பெரிதும் பயன்படும்.

கல்லூரி நூலகங்களின் நிலையும் இன்று பாராட்டத் தக்க முறையில் இல்லை. தேவையான புத்தகங்கள் நிறைந்த நூலகங்கள் இருந்தும் மாணவர்கள் அவற்றைப் பயன்படுத்துவதில்லை. இவற்றிற்குப் போதிய வருவாய் இருந்தும் இவை நன்கு பயன்படுவதில்லை.

பொதுமக்கள் என்று எடுத்துக் கொண்டால்கூட அவர்களுக்குப் படிக்கும் ஆர்வத்தை நாம் இன்னும் தூண்டவில்லை. 'அறிவுப் பெருக்கம்' என்பது பல துறைகளிலும் நாள்தோறும் பெருகிவரும் ஒன்றாகும். குறிப்பாக அறிவியல், தொழிலியல் துறைகளில் 'அறிவுப் பெருக்கம்' பெருமளவில் நிகழ்ந்து வருகின்றது. பொதுவாக இன்றுள்ள வேகத்தில் பத்து ஆண்டுகளில் இருமடங்கு அறிவுப் பெருக்கம் ஏற்படுகிறதாகக் கணக்கிட்டுள்ளனர். இந்த நூற்றாண்டின் இறுதியில் இன்றுள்ளதைப் போல் ஆறு மடங்கு அறிவு பெருகியிருக்கும் என்று எதிர்பார்க்கின்றனர். இத்தனை அறிவையும் மாணவர்களுக்கும் மக்களுக்கும் எப்படி உணர்த்தப்போகிறோம்! நூலகங்கள்தாம் இந்தப் பணியைச் செய்ய முடியும்.

ஆனால், இன்று மாணவர்கள் நூலகங்களைப் பயன் படுத்துவதில்லை. கல்விக் கூடங்களில் இன்று நூலகம் ஒரு கூடுதல் அணிகலன் போலத் திகழ்கின்றதேயன்றி இன்றியமையாத உறுப்பாகக் கருதப்பெறுவதில்லை.

கே : கல்வி என்பது கல்விக் கூடங்களோடு முடிந்து விடுவதில்லை என்பதை இங்கிலாந்து, ஐரோப்பா, அமெரிக்கா போன்ற மேலைநாடுகள் உணர்ந்திருக்கின்றன. அந் நாடுகளில் நூலகங்கள் வளர்ந்திருக்கின்றன என்பதற்கு மற்றொரு காரணம் போதிய நூல்கள் கிடைக்கின்றன என்பதாகும். நம் நாட்டில் இன்னும் புத்தக வெளியீட்டுத் துறை முன்னேற வில்லை. இங்குள்ள பதிப்பகங்கள் வெளியிடும் நூல்கள் உயர் கல்விக்குப் பயன்படக் கூடியவையே. பொதுமக்களுக்குப் பல்வகை யறிவைத் தரக்கூடிய நூல்களை அவரவர் மொழியில் எளிய முறையில் யாரும் வெளியிடுவதில்லை.

இந்திய அரசின் பெரும் பொருளுதவியினால் இந்தியில் ஏராளமான நூல்கள் வெளிவந்துள்ளன என்பது உண்மை. ஆனால், அவற்றின் தரம் விரும்பத் தக்கதா யில்லை. ஏதோ நூலகங்கள் இருக்கின்றன ; எப்படியும் ஆயிரம் படிகள் விற்கும் என்று எண்ணி நூலெழுதும் எழுத்தாளர்கள் இருக்கிறார்கள். ஆனால், எழுதப்படிக்க மட்டுமே தெரிந்த கோடிக் கணக்கான மக்களை மனத்தில் கொண்டு நம் நாட்டில் புத்தகங்கள் தயாரிக்கப் பெறுவதில்லை.

உயர்கல்வி யென்று எடுத்துக்கொண்டாலும் அமெரிக்க, உருசியப் புத்தகங்களை அப்படியே இறக்குமதி செய்து கொள்கிறோமே தவிர இந்தியப் பேராசிரியர்களின் நூல்களுக்கு மதிப்பளிப்பதில்லை. நூலகத் துறை பற்றி, பேரறிஞர் டாக்டர். எஸ். ஆர். அரங்கநாதன் எழுதிய நூல்களுக்கு மட்டுமே இந்த நாட்டிலும் வெளிநாடுகளிலும் நல்ல வரவேற்பு உள்ளது. இந்தப் பணிக்காகவே தம்மை ஒப்படைத்துக் கொண்டு புதிய வகைகளில் சிந்தித்து அவர் நூல்களைப் படைத்தார். இத்தகைய ஆற்றல் படைத்தவர்கள் எல்லாத் துறைகளிலும் தோன்ற வேண்டும்.

கி : இந் நாட்டின் நூலக வளர்ச்சிக்குத் 'தேசிய நூலகத் திட்டம்' தேவைதான். ஒவ்வொரு மனிதனும் அவனுக்கு வேண்டிய அறிவைப் பெருக்கிக் கொள்வதற்கு வேண்டிய வசதிகளை நூலகங்கள் செய்துதரவேண்டும். இதுவே இத் திட்டத்தின் முக்கிய குறிக்கோளாகக் கொள்ளவேண்டும். இதையே டாக்டர். அரங்கநாதன் நூலக இயலின் 'ஐந்து விதிகளில்' ஒன்றாகப் 'படிப்போர்க்கு ஏற்ற நூல்கள்' என்று குறிப்பிட்டார்.

இந்த நாட்டில் முதலில் 'நூலகப் பண்பாடு' (Library culture) தோற்றுவிக்கப் பெறவேண்டும். பிரான்சு மற்றும்

உருசிய நாட்டில் இது நன்கு மலர்ந்துள்ளதைக் காணலாம். சோவியத் ஒன்றியத்தில் ஒரு நூல் வெளியிடப் பெற்ருல் அதை வாங்க மக்கள் வரிசையில் நிற்கின்றனர். பிரெஞ்சு நாட்டில் மக்கள் பேருந்தில் போகும்போதும் புகைவண்டிப் பயணத்திலும் புத்தகங்களைப் படித்துக் கொண்டிருக்கின்றனர். முன்னேறிய நாடுகளில் இத்தகைய நூலகப் பண்பாடு பரவியுள்ளது. அந் நாடுகளில் நூலகத்திற்குப் போவதை ஒவ்வொரு குடிமகனும் முக்கிய கடமையாக எண்ணுகிருன். இந்த நாட்டின் நிலை எப்படி ? மிகமிக வருந்தத்தக்கது. சவகர்லால் நேரு பல்கலைக் கழக நூலகத்திற்கு அதன் துணை வேந்தராக 4½ ஆண்டுகள் இருந்த ஒருவர் மூன்றே முறைதான் வருகை தந்துள்ளார். நூல்கள் வெளியிடுவதும் நூலகப் பண்பாட்டின் அடிப்படைக் கூறுதான்.

கே : நூலகப் பண்பாடு மலர மக்களிடையே படிக்கும் பழக்கம் பெருகவேண்டும். இதற்குப் பொது நூலகங்கள்தாம் தேவையான நடவடிக்கை எடுக்கவேண்டும். நம் நாட்டில் ஒவ்வொரு மாநிலத்திலும் ஒவ்வொரு வகையாக உள்ளது. மகாராட்டிரத்தில் ‘நூலகச் சட்டம்’ நிறைவேற்றப் பெறவில்லை. ஆனல், அரசு அங்குள்ள நூலகத்தை அதிகாரிகளின் வழியாகக் கட்டுப்படுத்தி வைத்திருக்கிறது. நூலகச் சட்டம் நடைமுறையில் உள்ள மாநிலங்களில் போதிய வருவாய் இல்லை. வரிவிதிப்பு முறை சரியாக இல்லை. மைசூரில் நூலக வரி ஒரு பங்கென்ருல் அரசு இரு பங்கு செலவழிக்கின்றது. நூலகங்கள், வரும் தொகை முழுவதையும் செலவிடுவதில்லை. சென்னையில் போதிய வருவாய் இல்லை. இவ்வாறு மாநிலத்துக்கு மாநிலம் பலவகைகளில் வேறுபாடுகள் உள்ளன. எனவே மாநில அரசுகளும் மைய அரசும் ஒன்று கூடி, நாடு முழுவதும் பொதுநூலக வளர்ச்சிக்கு வேண்டிய திட்டம் வகுத்து அதற்கு வேண்டிய நிதியுதவியையும் தாராளமாகச் செய்யவேண்டும். அப்போதுதான் பொதுநூலகத் திட்டம் சிறப்பாக நடைபெறும். முதியோர் கல்விக்காகக் கோடிக்கணக்காகப் பொருளைச் செலவிடும் அரசு அதில் பத்தில் ஒரு பங்கை இவ்வாறு பொதுநூலகங்களை நடத்தவும் அதற்குரிய நூலகர்களுக்குப் பயிற்சியளிக்கவும் செலவிட்டால்தான் அந்தத் திட்டமும் செயல்படும் ; நூலகத் துறையும் வளர்ச்சியடையும். இதில் அரசுதான் அக்கரை செலுத்தவேண்டும்.

———

# சிவஞானபோத ஆராய்ச்சி

[அருட்டிரு அழகரடிகள்]

(சிலம்பு ௫௩, பரல் ௩, ௧௨௦ஆம் பக்கத் தொடர்ச்சி)

"நாடியோ என்போ நரம்புசீக் கோழையோ
தேடி எனையறியேன், தேர்ந்தவகை—நாடியரன்
தன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணார்,
என்னும் எனஅறிவார் இன்று."

நாடியோ எலும்போ நரம்போ சீ கோழையோ என்று உடம்பில் உள்ள இவை நானா எனத் தேடியும் என்னை நான் காணமுடியவில்லை. என் தலைவனையும் என்னையும் நாடித் தெளிந்த வகை வேறு உணர்வினால்; அதற்குத் தான் பதிஞானம் என்று பெயர். அந்தப் பதிஞானத்தால் பெருமானையும் தம்மையும் கண்டு கொள்ளாதவர், தம்மை மறந்த இவ் வீடுபேற்றுக் காலத்தில் முதல்வனை என்ன இயல்பினர் என்று அறிய முடியும்?

இது, இச் செய்யுளின் உரையும் கருத்தும். சீ என்பது புண் நீர்; கோழை என்பது சளி நீர்; 'அரன் தன்னாலே' என்பது அரன் ஞானத்தாலே என்றபடி. வீடு பேற்றுக் காலத்தில் எல்லாம் மறந்து இன்பம் ஒன்றிலேயே திளைத்திருப்பாராதலால், வேறு எதனையுங் காண முடியாதே என்பது கருத்து.

'அறிவு நிலை வேறாகவும் தெளிவு நிலையாகிய உணர்வு நிலை வேறாகவும் ஏன் சொல்லவேண்டும், இரண்டும் ஒன்றே என்றால் என்ன?' என்று இங்கே ஐயம் தோன்றும். அறிதலாகிய ஆராய்ச்சி வேறு, தெளிதலாகிய உணர்வுநிலை வேறு. ஒன்று செய்வதை மற்றொன்று செய்யாது. அறிவு நிலையால் அறியாப் பொருள்களையும் நூல்களையுந்தாம் அறியமுடியும்; அதுவும் அவற்றை முழுதும் அறியமுடியுமென்று சொல்ல இயலாது என்று விளங்கிக்கொள்ளவேண்டும். தெளிவு இல்லாதவரின் அறிவு, மயக்க அறிவாகும். ஒரு செயலுக்கும் பயன்படாது. தன்னையுங் காணாது தன் தலைவனையும் காணமாட்டாது. தெளிவார்ந்த உணர்வு திட்டமான செயலுக்கு உதவும். தன்னையும் என்பது தன் ஐயையும் என்று பிரியும் இரட்டுறமொழிதல்.

"காட்டிய கண்ணே தனைக்காணா, கண்ணுக்குக்
காட்டாய உள்ளத்தைக் கண்காணா—காட்டிய
உள்ளம் தனைக்காணா உள்ளத்தின் கண்ணாய
கள்வன்றான் உள்ளத்திற் காண்."

பொருள்களைக் காட்டிய கண், தன்னைக் காண்பதில்லை. தனக்குக் காணும் நிலை தருவதாகிய தன் முதல் என்னும் உயிரையும் அக் கண் காண்பதில்லை. அதுபோல முதல்வனால் காட்டப்பட்ட உயிர், தன்னைக் காண்பதில்லை; தன் தலைவனாகிய இறைவனையும் தன் அறிவு நிலையிற் காண்பதில்லை. ஆனால் அவன், உயிரினுள் அதன் அறிவில் மறைந்திருந்துகொண்டு கள்வனாய் அப்படிக் காட்டிவருகிறான். உள்ளத்தின் கண்ணாய அக் கள்வனைப் பதிஞானம் கொண்டு உள்ளத்திலேயே கண்டுகொள்க என்பது இச் செய்யுளின் கருத்து.

**பொருள் :**

செய்யுளில் ‘உள்ளம்’ என வந்தது, உயிர்; ‘காணா’ என்று பன்மையால் வந்தமையால் ‘கண்கள்’ என்றும், ‘உயிர்கள்’ என்றும் எழுவாயையும் பன்மையாகவே கொள்ளலாம். ஏனென்றால் காணாதுள்ளத்தின் எனச் சேர்ந்து வரக்கூடிய இடத்திலும் ‘காணா’ எனவே நின்றமையாலும், பயனிலையைக் கொண்டே எழுவாயையும் திட்டப்படுத்துதல் முறையும் மரபுமாதலாலும் என்க. தனை என்பது தன்னை எனவும், தன் ஐ எனவும் இரட்டுற மொழிதலாக வந்தமையால் அவ்வாறு பொருள் செய்ய வேண்டி ஒருமையில் வந்தது; இறைவன் உள்ளத்தில் மறைந்து நிற்பதனால் ‘கள்வன்’ எனப்பட்டான். கள்வன்தான் என்னுமிடத்தில் ‘கள்வன்றான் ஆதலால்’ என ஒரு சொல் வருவித்துக் கொள்க.

அவன் இருக்குமிடமாகிய உள்ளத்திற் சென்றே, அதாவது உயிரின் உணர்வினுள் சென்றே, பதிஞானத்தால் அவனைக் காணவேண்டும். வேறு இடத்தில் வேறு வகையில் அவனைக் காண்பதைவிட அஃது எளிது. அறிவு இனமாதலால் மற்ற இடங்களில் இருப்பதைவிட உயிரின் அறிவிலேதான் மிகுதியாகப் பெருமான் சேர்வது இயல்பு. “அறிவினில் அருளால் மன்னி” என்பார் அருணந்திசிவனார் “என்னுள்ளத்தே தேடிக் கண்டு கொண்டேன்” என்றார் திருநாவுக்கரசர். பதிஞானம் தோன்றுவதும் உயிர்களின் அறிவிலேதான்; தோன்றும் பதிஞானத்தைக் கொண்டு, கள்வனைப் போல் மறைந்திருக்கும் ஆண்டவனை, அங்கேயே அறிந்துகொள்ளலாம் என்பது கருத்து.

**இரண்டாம் பிரிவு :**

முதல் பிரிவு இறைவனை ஞானக் கண்ணால் காண்க என்றது; ஞானக்கண்ணைப் பெறுவதெப்படி என்று உடனே விருப்பம் உண்டாகும். அதனை நீக்குவது இந்த இரண்டாம் பிரிவு.

இதற்கு ஆசிரியர் தெரிவித்த மேற்கோள், 'அசத்தாயுள்ள வன்ன பேதங்களை அசத்து என்று காண, உளதாய் நிற்பது ஞானசொருபம்' என்பது.

வன்ன பேதங்கள் என்பது உலகத்தின் பலவேறு பொருள் கள். இவை அறிவில்லாதவை; நிலையில்லாதவை. அதனல் 'அசத்தாயுள்ள' என்று ஆசிரியர் தெரிவித்தார். இந்த உலகப் பொருள்களைப் பற்றிய அறிவுகள் பதிஞான நிலையை மறைத்துக் கொண்டு தடுக்கின்றன. அவற்றை அறிவிற் கொள்ளாமல் விட்டுவிட்டால், அவை தடுக்கமாட்டா. அப்போது ஆன்மாவினுள் இயல்பாகவே விளங்குவது பதிஞான நிலைதான்; ஆன்மா அதனைத் தனது அறிவில் கொள்ளும்.

முன் அறிவு நிலை சுட்டறிவுநிலை; அருள்ஞானம் என்னும் இந்த உணர்வுநிலை தெளிவுநிலை; ஆன்மாவின் ஆற்றல் இதனல் மிகுதியாகத் தெரியும். பரந்த பேருணர்வு நிலை என்று இதனைச் சொல்லிவிடலாம். நிழல் போலக் குளிர்ந்து அந்தப் பதிஞானம் விளங்கும். எல்லாம் ஆன்ம உள்ளத்தின் வேறுபாடுகள்தாம். 'அசத்துக்கள்' அந் நிலையில் இல்லாமற் போவதில்லை. அதைப் பற்றிய ஆன்மஉள்ளத்தின் நிலையிலேதான் மாற்றம். துய்க்கும் முறையில் உலகப் பொருள்களை அறியாமல் இருந்துவிட்டால், அவை பதிஞானத்தைத் தடுக்கமாட்டா.

அந்நிலை பதிஞானத்தின் தொடக்கம்; சிவசத்தை உணரும் வகையில் பதிஞானம் பெருகப் பெருக எதை நோக்கினலும் அதிலுள்ள சிவசத்தியே தோன்றும்; மங்கலத் தன்மை விளங்கும்.

இங்கே ஒரு நினைவு எழும். உலகத்தின் பொருள் வேறு பாடுகள் நீங்கினல் ஆன்மாவின் படிகத் தன்மை தானே தோற்றும்; பதிஞானம் தோற்றும் என்பது எப்படி? என்று நினைக்கலாம். அற்றன்று, நீங்கினல் அப் படிகத்தில் தோற்றுவது சிவசத்து; அதுதான் காத்துக்கொண்டிருக்கிறதே!

இந்நிலையில், 'சித்திகள்' 'அற்புதங்கள்' சில உண்டாகக் கூடும்; அவற்றிலும் பற்றுக் கூடாது; மிகப் பெரிய கடைசி இன்பத்துக்கு இவையும் தடைகள்! தேவையுள்ளபோதுமட்டும் பிறர்க்காகப் பயன்படுத்திக் கொண்டு, அவற்றைக் கடந்து, சிவசத்தையே தொடரவேண்டும்; அது மெய்யுணர்வுப் பெருக் கத்தைக் காட்டும்.

'வெறும் பொய்யென நினைந்திரு' என்று சித்தியாரும் கூறிற்று. மெய்யைப் பற்றிய உணர்வு மிகுந்துகொண்டிருந்தால், மற்றவற்றைப் பற்றிப் பொருள் செய்ய நேராது.

"நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியா னந்தனாய்த்
தற்பரமாய் நின்ற தனிமுதல்வன்—அற்புதம் போல்
ஆனா அறிவாய் அளவிறந்து தோன்றானோ
வானே முதல்களையின் வந்து."

பொருள் :

நிர்க்குணனாய் - 'சாத்துவிக இராசச தாமசம்', என்னும் மாயையின் குணங்கள் அற்றவனாய்; நின் மலனாய் - அறியாமை மலமும் நீங்கியவனாய்; நித்திய ஆனந்தனாய் - வினையின்பம் அல்லாத நிலைத்த பேரின்பம் உடையவனாய் - தன் பரமாய் - ஆன்மாவுக்குத் தலைவனாய்; நின்ற தனி முதல்வன் - இப்படி இருக்கும் தனித்த முதல்வன்; வானே முதல் களையின் - வான் முதலான பொருள்களின் உலகப் பற்று நீங்கினால்; அற்புதம்போல் ஆனா அறிவாய் அளவு இறந்து வந்து தோன்றானோ - அன்பின் அருஞ்செயலாகவும் புதுமை போலவும், நீங்கா இயற்கையுணர் வினனாய், ஆராய்ச்சி அளவுகள் கடந்து வந்து தோன்றமாட்டானா? (தோன்றுவான் என்றபடி.)

ஆன்ம அறிவு அசத்துப் பொருள்களை முன்னே சுட்டி அறிந்துகொண்டிருந்தது; அந்த இயற்கையறிவு இப்போது ஆராய்ச்சி தீர்ந்து, அன்பு கனிந்து தெளிவு சேர்ந்து தோற்று கிறது. இப்படித் தெளிவு பிறப்பதற்கு மாயையின் குணங்கள் நீங்கி, மலம் நீங்கி, வினை கழன்று, நிலைத்த மங்கலங்களையே நாடி உயிர் பரந்த நிலையில் பெருகி முறுகி வரவேண்டியிருக்கிறது. அற்புதம், அன்பின் புதுமை; அருஞ்செயல்கள்; அவை வியத்தற் குரியன. அற்புதம் போல் - அற்புதமாய்; இறைவன் தன்மைகளைச் சார்ந்தால், மற்றவற்றில் பற்றுச் சாராது ஆதலால் பற்றுக் களைத லுக்கு வழி கூறினார். வந்து தோன்றுவான் என்க.

"சுட்டி உணர்வதனைச் சுட்டி அசத்தென்னச்
சட்ட இனியுளது சத்தேகாண்;—சுட்டி
உணர்ந்த நீ சத்தல்லை; உண்மையைத் தைவம்
புணர்ந்ததனாற் பொய்விட்டுப் போம்."

சுட்டி அறியும் உலகப் பொருளை அசத்தென்று சுட்டியறிந்து நீங்கினால், இனிச் சத்துப் பொருள்தான் செவ்விதிற் காணப் படும்; நீங்கினால் உயிரன்றோ சத்தெனக் காணப்படும் என்றால்,

இதுவரையில் அசத்துப் பொருள்களை நீ சுட்டி அறிந்து கொண்டிருந்ததனுல் உன்னைச் சத்தென்று சொல்லுவதற்கில்லை. சத்துப் பொருளை (கடவுளை) அதன் தன்மையாய் (தைவமாய்) நீ சேர்ந்ததனுல் (சிவஞானப் பதிவுபெற்றதனுல்), அசத்தைச் சுட்டி அறியும் தன்மை உன்னை விட்டு இனி நீங்கிவிடும்; நீ மெய்யைச் சார்ந்தவனுய்ச் சார்ந்ததன் வண்ணமாகி, உன் உணர்வு சிவஞானம்பெறுவதற்கு மட்டும் உரியதாயிற்று. இப்படிப், பாட்டின் கருத்து வந்தது.

சுட்டறிவு நீங்கினுல் வேறென்றும் அங்குத் தோன்றலாமே, 'சிவஞானம் என்றுதான் ஏன் சொல்லவேண்டும்? உயிரே சிவமாய்விட்டது என்று சொன்னுல் என்ன?' எனவெல்லாங்கூட நினைவெழும். அப்படி உயிர் சத்தே ஆகிவிடாது என்பதை இப் பாடல் விளக்கியது. உயிர் இதுவரையில் சுட்டறிந்து வந்த பொய்ப்பொருள்கள்தாம் அந்த உயிரை விட்டு நீங்கும். மெய்யுணர்வு விளங்கும் என்று தெளிவித்தார்.

> **"கண்டதை யன்றன் றெனவிட்டுக் கண்டசத்தாய்**
> **அண்டனை ஆன்மாவில் ஆய்ந்துணரப்—பண்டணைந்த**
> **ஊனத்தைத் தான்விடுமா றுத்தமனின், ஒண்கருட**
> **சானத்தில் தீர்விடம்போற் றுன்."**

அசத்தாய்க் கண்டதை மெய்யன்று, மெய்யன்று எனப் பற்று விட்டு, மெய்யாய்க் கண்ட சத்துப் பொருளாய், இறைவனை ஆன்ம உணர்வில் நுணுகியுணரப் பிறவியில் முன் அணைந்துவிட்ட மாயைக் கருவிகளை இறைவன் திருவருளால் உயிர்கள் விடும் வகை, ஒளிமிக்க கருடத் தேனிப்புக்கொண்டு பாம்பின் நஞ்சு தீர்வதைப் போலத்தான்! இது, செய்யுட் பொருள்.

ஆன்ம அறிவே, சுட்டறியும் நிலை நீங்கிப் பரந்த பதிஞான மாய் மாறுந்தன்மை எப்படி முடியும் என்னும் கேள்விக்குக், 'கருடத் தேனிப்பால்' எப்படிப் பாம்பின், நஞ்சு தீருமோ அதைப்போல் சிவசத்தின் தேனிப்பால் அசத்துப் பொருள்களின் பற்றும் நீங்கும் என்றபடி.

கருடத் தேனிப்பு மூவகைப்படும். உலகத்தில் தோன்றும் கருடன் ஒன்று; மந்திரக் கருடன் ஒன்று; அதனை இயக்கிப் பயன் தரும் சிவசத்திக் கருடன் ஒன்று;

உலகத்தில் காணப்படும் கருடனை மன ஆற்றலாகிய மந்திரத்தால் ஒருவர் தேனித்தால், அந்த மந்திர ஒலியிலும் இயக்கத்திலும் சிவசத்தி நின்று உதவும். இதனுல் செய்யுளில்,

'உத்தமனுல் இங்ஙனம் விளையும்' என்னுங் கருத்தால் 'உத்தமனின்' என்ருர். இன் ஏதுப்பொருளில் வந்தது.

கருட சானம் என்பது கருடத் தேனிப்பு! இங்கே கூறுவது மந்திரக் கருடனுதலால் 'ஒண் கருடன்' என வந்தது. மந்திர ஒலிகளின் மாண்பு இதனுலும் புலப்படும்; இறைசத்தி இணங்கும் இடம், மந்திர ஒலிகள்; அதன்பின்பே அம்மையப்பர் பொருள்களில் இறங்குவர், பொருள்கள் இயங்கத் தொடங்கும்.

பாம்பு கடித்துவிட்டால் அதன் நஞ்சு ஏறுவதற்கு முன், கருட மந்திரம் சொல்லிக் கருடனைத் தேனித்தால், நஞ்சு தீர்கிறது. அது தானே தீராது; பாம்புக்குக் கருடன் பகையாதலால் கருடனைத் தேனிக்க நேர்ந்தது; அப்போது இறைசத்தி முதலில் ஒலியிலும், பின்பு அந் நச்சுப் பொருளிலும் நின்று நஞ்சை நீக்கியது. தேனிப்பவரின் உண்மைக்கும் மனவலிமைக்கும் தக்கபடி, சிவசத்தி பெருகிவரும்; நஞ்சும் விரைவில் நீக்கப்படும். 'மந்திரக் கருடன்' என்றது, கருட மந்திரத்தை வலிவாய்க் கருடவடிவில் நினைப்பது, அவ் வொலிநினைவில் இறைவன் ஒளிக்கருடனுகி நஞ்சு தீர்ப்பான். 'ஒளிக்கருடனுகி' என்றது 'பொருட் கருடவடிவாய்' என்றபடி;

இதைப்போல் சிவசத்தை உண்மை யன்போடும் வலிவோடும் உயிர் திருவைந்தெழுத்து மந்திரத்தைப் பொருளுணர்ந்து தேனித்து வந்தால் பெருமான் திருவருள் அதனில் இயங்கி 'அசத்துப்பற்று' என்னும் நஞ்சின் நீக்கத்துக்கு ஒளிக் கோலமாய்த் துணைபுரியும் ஆன்மாவும் பரந்த சிவஞானத்தைப் பெறும்.

மூன்ரும் பிரிவு :

சிவஞானத்தை அடைந்த பின்பு வேறென்றும் செயலில்லையே என்று நினைக்கத் தோன்றும். உயிர்கள் பல திறமாதலால் சிவஞானம் அவரவர் இயல்புக் கேற்றபடியே பெருகி வரும். அப்படிப் பெருகி வருதலை, நிலைக்க வைப்பதற்கு, முதலிலிருந்தே தண்ணிழலாய் விளங்கிவரும் பதிஞானக் கண்கொண்டு மேன்மேலும் சிவசத்தைத் தேனித்து வரவேண்டும். தேனிக்குமிடத்தில், தேனிப்பு வகையைச் சேர்ந்து முத்தித் திருவைந்தெழுத்தை அதற்குரிய முறைப்படி எண்ணி யுருகவேண்டும்.

நூற்பாவில் ஐந்தெழுத்தென்று பொதுவாகக் கூறினுலும் இடத்துக் கேற்றபடி 'முத்தித் திருவைந்தெழுத்'தென்று அதனை வகை பிரித்துக் கொள்ளுதல் நன்று. இது ஒரு கருத்து; 'முத்தித் திருவைந்தெழுத்து' நாவினுல் கூறுதலன்று; அதன் முறைமை, உணர்வளவாய்த் தேனித்தலாகும். இது, மற்றொரு கருத்து.

அதனல் அதனே இவ்விரு கருத்துந் தோன்ற 'விதிப்படி' என்றும் 'எண்ணும்' என்றும் நூற்பாவில் ஆசிரியர் கூறினர்.

திருவைந்தெழுத்தைப் பிறர் கேட்கவும் உச்சரிக்கலாம். அது 'தூலத் திருவைந்தெழுத்து'; மற்றவர் கேட்க இயலாதபடி நாவி ஞல் மெல்ல நவிலலாம்; அது 'நுட்பத் திருவைந்தெழுத்து'; உள் ளத்தில் உள்ளத் தளவாகவும் உணர்ந்து தேனிக்கலாம்; அது மிகுநுட்பத் திருவைந்தெழுத்து. 'முத்தித் திருவைந்தெழுத்து' என்றுஞ் சொல்லப்படும். இவற்றிற்கு விதிக்கப்பட்ட முறைமை உரை, மந்தம், மானதம் என்பது.

தூலத் திருவைந்தெழுத்து, 'நமசிவாய என்னும் ஆண்ட வன் பெயர்; இது ஒரே சொல்; நாதன் நாமம்;

நுட்பத் திருவைந்தெழுத்து, மூன்று சொற்கள்; 'சிவா' என்பது சிவத்தையும், 'ய' என்பது 'யான்' என்னும் உயிரையும், 'நம' என்பது வணக்கத்தையும், அதாவது வணங்குதற்கு ஒரு வகைக் காரணமான மலங்களேயும் குறிக்கும்; 'கடவுள்' 'உயிர்' திணே என்னும் முப்பொருள்களேயும் அவை உணர்த்துகின்றன.

முத்தித் திருவைந்தெழுத்து என்பது, 'நம' என்னும் மலங் களின் நினேவு நீங்கி உயிரைக் குறிக்கும் எழுத்துக்கு முன்னும் பின்னும் அம்மையப்பரைத் தேனிக்கும் எழுத்துக்களே அமைந்தது. இதில் 'நம' என்னும் மலங்கள் இல்லே. உயிரைக் குறிக்கும் 'ய' எழுத்துக்குப் பின் மீண்டும் 'சிவா' என்பதே வந்து ஐந்தெழுத் தாகும். இம் முத்தித் திருவைந்தெழுத்தில், திருவைந்தெழுத்தின் ஐந்தெழுத்துக்களுக்கும் ஐந்து பொருள் உண்டு. முதலில் உள்ள 'சி' தூய இயற்கைச் சிவத்தை யுணர்த்தும்; 'வா' அதனேடு இயைந்த கருணேயை உணர்த்தும்; 'ய' பக்குவ முதிர்ச்சி வாய்ந்த வீடுபேற்றுயிரை உணர்த்தும்; அடுத்து வரும் 'சி' குருவாய் எழுந் தருளும் சிவசத்தை உணர்த்தும்; அதனே அடுத்து வரும் 'வா' என்பது, சிவஞானம் என்னும் அம்மையை உணர்த்தும். பக்குவ முதிர்ச்சியுள்ள ஓர் ஆன்மா முதலில் குருவை எதிர்ப்பட்டு அவ் வழியே சிவஞானம் பெற்றுத், தொடர்ந்து திரும்பி, அம்மையோடும் அப்பனேடும் கூடுதலே இவ் வீடுபேற்றுத் திருவைந்தெழுத்து உணர்த்தும்.

இப்போது உயிரின் கருத்தெல்லாம் திருவருளின் துணேயால் தூய சிவத்தை அடைந்து பேரின்பம் உறுதலேயாதலால், உயிருக் குரிய 'ய' எழுத்து அருளேயுணர்த்தும் 'வா' என்பதை அடுத்து வந்தது. சிவமே குருவாய் எழுந்தருளிக் கருணேயோடு சிவஞானம்

பதித்தலின் உயிரைக் குறிக்கும் எழுத்துக்கு முன்னும் பின்னும் இறைவனும் அம்மையுமே குறிக்கப்பட்டனர். மலம் நீங்கியபின் இத் திருவைந்தெழுத்து எழுவதாதலால் இதில் மலத்துக்குரிய எழுத்துக்களே யில்லை. உயிர் மலத்திற் பழக்கப்பட்டுவிட்ட அந்த இடத்தில், சிவகுரு அங்கே எழுந்தருளுதலால் சிவகுருவுக்குரிய எழுத்துக்கள் வந்தன.

எதிர்ப்படும் 'சிவகுரு' எப்போதும் அப்படியே இரார்; ஆதலின், கடைசியில் வரும் 'சிவா' என்னும் எழுத்துக்களை நீக்கிச் 'சிவாய' என்று மட்டும் உமாபதி சிவனர் கூறினர். கூறினரேனும் அதற்குச் 'சிவாய சிவா' என்பதே பொருள். 'ஏனென்றால், ஐந்தெழுத்தாக அது கணக்கிடப்படவேண்டும். கடைசி ஆகாரம் குறுகிச் 'சிவாய சிவ' எனவும் வரும். 'வா' என்னும் அழைப்பு, 'வருக' என்பதிற் குறுகி வருதல்போல என்பது. 'நமசிவாய' என்னும் தூய திருவைந்தெழுத்து, 'ஓம்' என்னும் வித்தெழுத்தோடு சேர்ந்து ஆறெழுத்தாகவும், 'சிவாய நம' என்னும் நுட்பத் திருவைந்தெழுத்து மூன்று வித்தெழுத்துக்களோடும் சேர்ந்து எட்டெழுத்தெனவும், கொடிக்கவி கூறும். முந்தித் திருவைந்தெழுத்து அங்கே, 'ஓம் சிவாய' என நாலெழுத்தாக எண்ணப்பட்டது.

உயிர்களின் அவத்தையில், புருவ நடுவிலிருந்து தொடங்கித் தூய அவத்தையில் (சுத்தாவத்தையில்) மேல் நோக்கி வளர்ந்து, அதனையுங் கடந்து, உச்சிக்கு மேல் நிராகாரமாய் அருளூற்றுக் கொள்ளுகிறது.

இங்ஙனம் மூன்று வகையாகத் திருவைந்தெழுத்து விளக்கப்படும். முத்தித் திருவைந்தெழுத்துக்கு இவ்வாறு வருதலால், நுட்பத் திருவைந்தெழுத்து மூன்று சொற்களாக முப்பொருள் உணர்த்தும் வகையில் வருதலே ஏற்றது. மல எழுத்துக்கள் இரண்டும் இன்னின்ன கருத்துடையன என்பதற்கும் 'ந என்பது, எழில் மாயை' என்னும் திரோத மலமும் என்பது, ஆணவ கன்ம மாயை மாயேய மலங்களும் கடவுள் எழுத்துக்கள் இரண்டும் இன்னின்ன கருத்துடையன என்பதற்கும் 'சி' என்பது செம்மை என்னும் சிவமும், 'வா' என்பது, வாவென்னுங் கருணையாகிய அம்மையும் தூலத் திருவைந்தெழுத்திலும் நுட்பத் திருவைந்தெழுத்திலும் ஐந்து எழுத்துக்களுக்கும் பொருள் விளக்கிப் பேசப்பட்டனவேயல்லாமல் வேறில்லை. பொருளுணர்ந்துகொண்டு, அந்தத் தூல நுட்ப ஐந்து திருவைந்தெழுத்துக்களையும் ஒரே சொல்லாகவும் மூன்று சொல்லாகவும் முறையே தேனிக்கவேண்டும்.

(தொடரும்)

# தமிழின் தலைமையை நாட்டும் தனிச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

14. **தெய்வம் :**

நன்மை செய்யும் பொருள்களை நன்றியறிவு பற்றியும், தீமை செய்யும் பொருள்களை அச்சம்பற்றியும், மாந்தன் தொன்றுதொட்டு வணங்கி வந்திருக்கின்றான். ஆவும் மரமும் போல்வன நன்மை செய்வன; பாம்பும் பேயும் போல்வன தீமை செய்வன; நீரும் நெருப்பும் போல்வன நன்மையுந் தீமையுஞ் செய்வன. பேயும் ஒரோவழி நன்மை செய்ததாகக் கதைகளுண்டு.

ஐம்பூதச் சேர்க்கையான உடம்பிற்கு ஐம்பூத உதவியும் வேண்டியுள்ளது. ஆயினும், தொட்டமட்டிற் சுடவுங் கொல்லவும் வல்ல தீ வெளியொழிந்த ஏனையவற்றிற் கொடியதாதலால், தீமையைக் குறிக்குஞ் சொல்லே தீப்பெயரினின்று தோன்றியுள்ளது.

*"தீயவை தீய பயத்தலால் தீயவை*
*தீயினும் அஞ்சப் படும்"* (குறள். 202)

என்னும் திருவள்ளுவர் வாய்மொழிச் சொற்பின்வருநிலையும் அதைத் தெளிவாய்க் காட்டும்.

இனி, இருளும் ஒரு பொறுக்கொணாத துன்பமாகி, தீயகம் என்னும் எரிநரகிற்கு இருளுலகம் என்றொரு பெயரும் ஏற்பட்டிருப்பதால், கதிரவ வடிவிற் பகலிருளையும் விளக்கு வடிவில் இரவிருளையும் போக்கும் தீயும், கண்ணிற்கு இன்றியமையாத ஒளியைத் தருவதுடன், உடம்பிற்கும் உணவிற்கும் வேண்டிய வெம்மையையும் உதவுகின்றது பற்றி, தெய்வம் எனப் போற்றத்தக்க பூதமுந் தீயேயாகி, தெய்வம் என்னும் பெயரும் தீயின் பெயரினின்றே தோன்றியுள்ளது.

நிலவுலகத்தில் இயற்கையாகவும் செயற்கையாகவும் தோன்றுந் தீ, பெரும்பாலும் பொருள்கள் ஒன்றோடொன்று உரசுவதினாலேயே ஏற்படுகின்றது. அதனால், உரசுதலைக் குறிக்குஞ் சொல்லினின்றே நெருப்பின் பெயர்கள் தோன்றியுள்ளன. அவற்றுள் ஒன்று தீ என்பது.

உல்—உர்—உரு. உருத்தல் = அழலுதல்.

உல் — உர் — உரி—எரி=நெருப்பு. உல்—உள்—ஒள்—ஒளி. உல்—துல்—துள்—தொள்—தோள்—தோய்—தேய்.

உரசுதல் என்பது, பொருள்கள் ஒன்றோடொன்று பொருந்தி, முன்னும் பின்னும் அல்லது மேலுங் கீழுமாகத் தொடர்ந்து இயங்குதல். உல்லுதல்=பொருந்துதல். உல்—ஒல். உல்—உர்—உரை—உரைசு—உரசு. உரை—உராய். உர்—உரி—உரிஞ்—உரிஞ்சு.

தேய்தல்=உரைசுதல், உரைசிக் குறைதல், குறைதல், மெலிதல், வலிகுன்றுதல், கழிதல், அழிதல், சாதல்.

ம. தேயுக, க. தே.

தேய்த்தல்=உரைசச் செய்தல், குறைத்தல், அழித்தல்; தேய்த்துத் துலக்குதல், தேய்த்துத் துடைத்தல். ம. தேயிக்க. தேய்ப்புத்தாள்=உப்புத்தாள். தேய்ப்புப் பலகை=சாணைக்கல்.

தேய்கல்=உரைகல்.

தேய்மானம்=தேய்வு. தேய்வு—தேய்வடை—தேய்கடை=தேய்ந்த காசு, தேய்ந்த பொருள்.

தேய்—தேய்வை=தேய்த்த சந்தனத் துவை. ''நறுங்குறடுரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை'' (திருமுரு. 33).

தேய்ப்புப்பெட்டி=ironing box.

தேய்—தேயு=தீ, நெருப்பு (பிங்.).

தேயு—தேசு=1. ஒளி. 2. பொன். (சது.) 3. அழகு. ''திருமா மணிவண்ணன் தேசு'' (திவ். இயற். 3 : 9) 4. புகழ். ''நும்முடைத் திருவுந் தேசும்'' (சீவக. 771). 5. அறிவை (ஞானம்). ''தேசுறு முண்பார்க்கென்றே தேறு'' (சைவச. பொது. 561). 6. பெருமை. ''வலிச்சினமு மானமுந் தேசும்'' (பு. வெ. 2 : 4). வீரியம். (W.)

தேசு—வ. தேஜஸ்.

தேசு—தேசி=அழகி. ''தேசியைச் சிறையில் வைத்தான்'' (கம்பரா. அங்கத. 4).

தேய்—தேயம்=ஒளி. ''அரனம்பலம்போற் றேயத்ததாய்'' திருக்கோ. 39).

தேய்—தேய்வு—தேவு=1. தெய்வம் (பிங்.). ''நரகரைத் தேவு செய்வானும்'' (தேவா. 696 : 2). ''தேவிற் றிருமா லெனச் சிறந்த தென்பவே'' (திரு. வெ.) 2. தெய்வத் தன்மை ''அயன்

றிருமால் செல்வமு மொன்ரூே வென்னச் செய்யுந் தேவே'' (ச. சி. காப்பு. ஞானப். உரை).

தேவில் = திருக்கோவில். ''கருவுடைத் தேவில்களெல்லாம்'' (திவ். திருவாய். 4 : 4 : 8).

தேவு—தேவன் = 1. கடவுள். ''தேருங்காற் றேவ னொரு வனே'' (திவ். இயற். நான்மு. 2). 2 அரசன். ''தேவர் நின் கழல் சேவிக்க வந்தனன்'' (கம்பரா. கங்கை. 39). 3. முக்குலத் தோர் பட்டப்பெயர்.

ம. தேவன், க. தேவ, தெ. தேவுடு, வ. தேவ (d.), இந். தேவ். (d).

தேவன்—தேவி = இறைவி. வ. தேவீ (d).

தேவு—தே = 1. தெய்வம் (பிங்.), ''தேபூசை செய்யுஞ் சித்திரசாலே'' (சிவரக. நைமிச. 20). 2. நாயகன் (இலக். அக.). 3. தெய்வம் போன்ற தலேவன். நாயன்தே—நயிந்தை.

தேய்வு—தெய்வு—தெய்வம் = 1. கடவுள். 2. திணே நிலேத் தெய்வம், சிறுதெய்வம். ''தெய்வம் உணுவே மாமரம் புட்பறை'' (தொல். அகத். 18). 3. தெய்வத் தன்மை. ''தெய்வமே கமழு மேனி'' (சீவக. 1718). 4. தெய்வத்தன்மை யுள்ளது. ''தெய்வத் தாற் கூருயோ'' (திணேமாலே. 90). 5. தெய்வமணம், இயற்கைப் புணர்ச்சி. 6. ஊழ். ''தெய்வத்தா லாகா தெனினும்'' (குறள். 619).

தெய்வம் என்ற சொல்லிலுள்ள யகரம் அடிப்படை மெய் யெழுத் தென்பதை அறிதல் வேண்டும். இச் சொல் பெருவழக் கான பெருந்தொகைக் கூட்டுச்சொற்களில் நிலேயுறுப்பாக வுள்ளது.

எ - டு: தெய்வமாடுதல், தெய்வாவி (தெய்வ ஆவி), தெய்வ வுத்தி (திருமுரு. 23), தெய்வவுலகம், தெய்வ முறுதல் (சிலப். 19 : 26, அரும்.), தெய்வ ஏற்பாடு, தெய்வமேறுதல், தெய்வமே யென்று, தெய்வக் கண்ஞேர் (மணி. 27 : 146), தெய்வக் கம்மியன் (திருவாலவா. 26 : 11), தெய்வக்கல் (மணி. 26 : 89), தெய்வக் காப்பு (திவா.), தெய்வக்கிளவி (மணி. 7 : 97), தெய்வக் குற்றம், தெய்வக்குறை (W.), தெய்வகணம் (மணி. 21 : 130), தெய்வக்களே, தெய்வ கற்பனே (கட்டளே), தெய்வங் கொண்டாடி (நாஞ்.), தெய்வங் கொள்கை (நன். பாயி. 26), தெய்வச்சாயல் (W.), தெய்வச்சிலே, தெய்வச்சிலேயார், தெய்வச் சிலேயான், (திவ். பெரியதி. 9 : 4 : 3), தெய்வச் செயல் (கம்பரா. அதிகாய. 194), தெய்வஞ் செப்புதல் (பதிற்றுப். 82 : 1), தெய்வத்தச்சன் (கம்பரா.

ஊர்தேடு. 18), தெய்வத்தன்மை, தெய்வத் தீர்ப்பு, தெய்வத் தீர்வை, தெய்வப்பகை (சீவக. 364), தெய்வப்படை (கம்பரா. அதி காயன். 50), தெய்வப்பலகை (திருவாலவா. 15 : 4), தெய்வப் பாடல் (சிலப். 3 : 135, உரை), தெய்வப்பாவை (சீவக. 657), தெய்வப்பிறப்பு, தெய்வப் பிறவி, தெய்வப் புணர்ச்சி (திருக்கோ, 7, கொளு.), தெய்வப் புலமை (குறள், சிறப்புப் பாயிரம்), தெய்வப்புள் (திவ். பெரியதி. 3 : 3 : 6), தெய்வப் பெண் (திருவாச. 19 : 6), தெய்வபத்தி, தெய்வமணம், தெய்வமணி (பிங்.) (கம்பரா. உருக் காட்டு. 68), தெய்வ மயக்கம் (சிலப். 12 : 51, உரை), தெய்வ மயக்கு (மணி. 21 : 109), தெய்வமரம் (பிங்.), தெய்வமாடம் (பெருங். இலாவாண. 7 : 143), தெய்வமுனி, தெய்வ வணக்கம் (காரிகை. பாயி. 1, உரை), தெய்வ வீடு (கம்பரா. நகரப். 32).

தெய்விகம் = தெய்வத் தன்மை. 'இகம்' பண்புப் பெயரீறு.

தெய்வு—தெய் = தெய்வம் (பிங்.).

தேய்—தீய். தீய்தல் = 1. எரிந்து போதல். 2. சோறு முதலியன பற்றிக் கருகுதல், பயிர் முதலியன வாடிக் காய்தல்.

தீய்த்தல் = தீய் என்பதன் பிறவினை.

தீய்—தீயல் = காய்ச்சும் குழம்புவகை. எ - டு : உப்புத் தீயல்.

தீய்வு—தீவு—தீவம் = விளக்கு. தீவம்—வ. தீப (p).

தீவு—தீவனம் = 1. எரிவு. 2. எரியும் பசி. 3. பசியைத் தணிக்கும் உணவு. 4. கால்நடைக்கு உணவாக இடும் கூளம். தீவனம்—வ. தீபந.

தீய்—தீ. தீதல் = 1. எரிந்து போதல். 2. சோறு கறி பற்றிக் கருகுதல். 3. பயிர் வாடிச் சருகாதல். 4. சினத்தல். 5. அழிதல்.

தீத்தல் = தீ என்பதன் பிறவினை.

தீ = 1. நெருப்பு. 2. ஒளி விளக்கு. 3. செரிமான வெப்பம். 4. கடும்பசி. 5. எரிநரகம். 6. தீமை. 7. சினம்.

தீ—தீங்கு = 1. தீமை 2. துன்பம். 3. குற்றம்.

தீ—தீமை = நன்மைக்கு எதிரானது.

தீ—தீம்பு = 1. தீமை. 2. கேடு. 3. குறும்பு.

தீய = (பெ. எ.) 1. கெட்ட. 2. கேடு செய்யும்.

தெய்வம்—*Gk. theos, L. deus, S. dyaus*, **god, deity.**

*E. deism, F. deisme,* f. *L. deus*+ism.

*E. deity, ME. deite,* f. *LL. deitatem* f. *deus*, god.

E. *divine, ME.* f. *OF. devin,* f. *L. divinus,* f. *divus*, god like.

E. *theism,* f. *Gk. theos*+ism.

தேவன்—*S. deva*, a deity, god, R.V., heavenly, divine, RV.

*devaka*, divine, celestial; a god, deity.

*devakiya*, divine, belonging or relating to a divinity.

*devata*, godhead, divinity. RV, AV.

*devatya*, having as one's deity, sacred to a deity.

*devaya*, loving or serving the gods, religious.

*devala*, an attendant upon an idol (who subsists on the offerings made to it).

*devika*, appertaining to or deived from a deity.

*devila*, righteous, virtuous, appertaining to a deity, divine.

*devi*, a female deity, goddess. RV.

*devya*, divine power, godhead. RV.

*daiva*, belonging to or coming from the gods, divine, celestial. AV

*div* (2) to shine, bebright. *Zd. div*, *Lit.* dyvas.

*div* (3) heaven, sky, day.

ஒளிதரும் கதிரவனும் திங்களும் வானத்தில் தோன்றுவதனுலும், திங்கள் தோன்ருத வேளையிலும் வெள்ளிகளால் வானம் சற்று விளக்கம் பெறுவதனுலும், வானமும்; பகல் ஒளி வேளையாதலாற் பகலும்; ஒளியைக் குறிக்கும் தேயு என்னும் சொல்லினின்று திரிந்த திவ் என்னுஞ் சொல்லாற் குறிக்கப்பட்டன.

பகலும் இரவும் சேர்ந்தே ஒரு நாளாயினும், இரவு தொழில் செய்யாது உணர்ச்சியற்று உறங்கும் வேளை யாதலால், அதைக்

கணக்கிற் சேர்க்காது பகலையே நாளென வழங்குவது பெரும்பான்மை உலக வழக்காகும். இருநாள் வேலையென்பது பொதுவாக இருபகல் வேலையையே உணர்த்துதல் காண்க.

*divan*, a day.

*divas*, sky, heaven. *divas-pati*, sky-lord.

*divasa*, daytime, day.

*diva*, by day. *divā-kara*, day maker, the sun.

*divi*, heaven-dwelling.

*divo*, born or descended from heaven.

*divya*, divine, heavenly, celestial

*dyo*, Guṇa form of *dyu* in comp.

*dyo-kāra*, maker of brightness, builder of splendid edifices

*dyau*, Vriddhi form of *dyu* in comp; *dyau-toka*, the heavenly world.

*dyaur*, heaven, sky, day, RV, AV. *dyaush-pitri*, Heaven-Father × *dyāvā-pritivi*, Earth-Mother.

2. *dyut*, shining, splendour, ray of light, RV.

*dyuti*, splendour, brightness, lustre, majesty, dignity.

*dyutita*, enlightened, illuminated, shining.

*dyota*, light, brilliance.

## DYAS and PRITHIVI

Dyaus Says Max Muller, is one of the oldest gods, not only of the Vedic Aryans, but of the whole Aryan race. He was worshipped before a word of Sanskrit was spoken in India, or a wood of Greek in Greece.—Hibbert Lectures, pp. 276, 288.

"If I were asked what I consider the most important discovery which has been made during the nineteenth century

with respect to the ancient history of mankind, I should answer by the following short line.

"Sanskrit DYAUSH-PITAR—Greek ZEUS PATER—Latin JUPITER—Old Norse TYR.

"Think what this equation implies! It implies not only that our own ancestors and the ancestors of Homer and Cicero (the Greeks and Romans) spoke the same language as the people of India—this is a discovery which, however incredible it sounded at first, has long clased to cause any surprise—but it implies and proves that they all had once the same faith, and worshipped for a time the same supreme Deity under exactly the same name a na ne which meant Heaven Father."—Nineteenth Century, Oct. 1885.

**மாக்கசு முல்லர்** இவ்வாறு கூறியது, சமற்கிருதம் ஒரு காலத்தில் வழங்கு மொழியாக இந்திய—ஐரோப்பிய மொழிகட்கெல்லாம் தாயாகவிருந்தது என்னும் தவருன கருத்துக்கொண்ட ஒப்பியன் மொழிநூல் தொடக்கக் காலமாதலால், ஆராய்ச்சி மிக்க இக் காலத் திற்கு முற்றும் ஒவ்வாது. ஆயின், தீ வணக்கம் முதற்காலத்தில் உலகப் பொதுவாயிருந்த தென்பதும், அதனின்றே தெய்வ வணக்கந் தோன்றிற்றென்பதும், குமரி நாட்டினின்றே மக்கள் உலக முழுதும் பரவியிருப்பதால் தேயு, தேவன், தெய்வம் என்னும் குமரித் தமிழ்ச்சொற்கள் இந்திய—ஐரோப்பிய மொழிகளிலெல்லாம் பரவிக் கிடக்கின்றன என்பதும், மறுக்க வொண்ணுத உண்மை களாகும்.

தேவ என்பதை நிலைச்சொல்லாகக் கொண்ட கூட்டுச் சொற்கள் சமற்கிருதத்தில் நிரம்பவுள.

எ - டு: தேவகணம், தேவகணிகை, தேவ கம்மி (கன்மி), தேவ குண்டம், தேவகுரு, தேவகுலம், தேவகோட்டம், தேவ கோடி, தேவசபை, தேவடியாள், தேவதாயம், தேவதாளி, தேவ தானம், தேவதீபம், தேவதூதன், தேவதேவன், தேவநகர், தேவநாகரம், தேவநாகரி, தேவநாயகன், தேவநிலம், தேவப்புள், தேவபாணி, தேவபூசை, தேவமாசம், தேவமாது, தேவமானம், தேவயாத்திரை, தேவயானை.

———

# வள்ளலார் வகுத்த
# சுத்த சன்மார்க்கம்

[டாக்டர் சொ. சிங்காரவேலன், எம்.ஏ., பிஎச்.டி.,

*தமிழ்த்துணைப் பேராசிரியர், அ. வ. அ. கல்லூரி, மாயூரம்*]

**சமயமாண்பு :**

சமயம் என்பது மனிதன் தன் ஆன்மிக முன்னேற்றத்திற்குப் பின்பற்ற வேண்டிய நெறி; உயிர் வளர்ச்சிக்கு உரம் ஊட்டும் பாதை; நிலைத்த இன்பத்திற்கு வழிகாட்டும் அன்புநெறி, உயிர்களை எல்லாம் அன்பிலே தோய்த்து நோக்க, உயிர்களை எல்லாம் கடவுளின் படைப்பாகக் கண்டு கருத்திலே களிப்புக் கொள்ள, இயற்கை வகுக்கும் இனிய நெறியே சமயம். நம் சமயச் சான்றோர்கள், சிறந்த அருளாளர்கள். மனித சமுதாயம் வாழ்வதற்கென்றே தங்கள் திருவாய்மொழிகளை அருளிச் சென்றார்கள். அவ்வருளிச் செயல்கள் அனைத்தும் உயிர்கட்கு நலம் பயப்பனவே ஆம். அகமுகத்தே கடவுளைக் காணவும், திருவருளிலே தோய்ந்தின்புறவும் மெய்ப்பொருளைக் கண்டு தோயவும், தொண்டிலே இன்பம் காணவும், தூய அன்பிலே விளக்கம் காணவும் அப்பெரியோர்கள் வகுத்த திருவருட் செய்திகள் துணைபுரிகின்றன. ஆம்; மனித குலத்தின் உய்விற்கென்று மாண்புடைய சான்றோர்கள் அருளிய அனைத்தும் இந்த உயர்நோக்கு உடையனவே.[1]

ஆனால் வள்ளலார், தாம் வாழ்ந்த காலத்தில் சமயம் மெய்யான பாதையாக இராமல், சிலருடைய தவறான போக்கால் அல்லல் நெறியாக இருத்தலைக் கண்டார்; இதயம் தளர்ந்தார், வேற்றுமையில் ஒற்றுமையைக் காணவேண்டிய சமயம், தானே

---

1. "The lessons taught us by the mystics may be summarized as (1) to look for reality within (2) to find meaning in mystery (3) to discover the eternal in the temporal (4) to realize the value of solitude (5) to find joy in the service (6) to discern honor in humility (7) to give supremacy to love."

—An encyclopaedia of Religion, pp. 513-514.

வேற்றுமைப்படுத்தும் வேதனைச் செயலைப் புரியும் கருவியாக மாறி விட்டதைக் கண்டு மனம் புழுங்கினர்; சாதியிலே, சமய விகற்பங் களிலே, சமயப் பிளவுகளிலே சார்ந்து நிற்கின்ற மனிதர்கள் தம் முடைய தீய போக்கிலிருந்து விடுதலை பெற்று வாழ ஏன் வழி இல்லை என்று சிந்தித்தார். போதியின் நீழலிலே கௌதம புத்தன் சிந்தனைத் தெளிவு கண்டதுபோல், மக்கட் சமுதாயத்தின் தெளிவற்ற நிலையைக் கண்டு மனம் சலித்த அடிகளார் நெஞ்சில் அன்பு சுரந்தது; அருள் ஊற்றெடுத்தது; இரக்கம் தழைத்தது; எல்லாவுயிர்களும் இன்புற்று வாழ்தல் வேண்டும் என்ற ஒப்பற்ற மனநிலை கொண்ட அன்புப் பெருக்கு இன்பக் கவிப்பெருக்காக வடிவெடுத்தது. சமரச சன்மார்க்க நெறி என்ற புதிய இயக் கத்தை உயிர்ப்பாகக் கொண்ட ஒளிமிக்க கவிதைகள் ஒன்றன்பின் ஒன்ருக அடிகளாரின் திருவாயிலிருந்து பொங்கிப் பெருகலாயின. ஆம்; திருவருள் மணம் கமழும் தெய்விகக் கவிமலர்களாக அவற்றை ஏற்று அக் காலத் தமிழ் உலகு கொண்டு, பாடி இன் புற்றது.

**அடிகளாரின் விரிந்த கண்ணேட்டம் :**

வேறுபட்ட சமயங்கள் எல்லாம் முடிவில் ஒன்ருதலைக் கண்டு உணர்ந்த அடிகளார் அதனைத் தம்முடைய அற்புதப் பாக்களால் எடுத்து அறிவுறுத்தலானர். குறுகிய சாதி, சமயக் கோட்பாட் டிற்கு அப்பால் பரந்த கண்ணேட்டம் கொள்ள வேண்டும் என்று அடிகளார் கருதினர். அப்போதுதான் உண்மையான பரநிலைக் காட்சி கிடைக்கும் என்று தெளிவுறுத்தினர். தாயுமானவர் நெறியையே பெரிதும் ஒட்டிச் செல்லும் கொள்கைகளாக அடிகளா ரின் கொள்கைகள் அமைந்திருத்தல் காணலாம்.

> "எல்லோரும் இன்புற்றிருக்க
> நினைப்பதுவே யல்லாமல்
> வேருென் றறியேன் பராபரமே"

என்று கூறியபடி, தாம் பெற்ற இன்பத்தை அனைவரும் பெற்றிட வேண்டும் என்று தாயுமானவர் கருதிய நெறிதான் - "யான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்" என்று திருமூலர் தெளிவுறுத்திய நெறிதான் வடலூர் அடிகளாரின் நெறி. ஆனல், சமரச சுத்த சன்மார்க்கம் என்ற புதிய பெயருடன் இந்த நெறி பரவலாயிற்று.

**அடிகளார் புது நெறி :**

"எண்ணற்ற அருளாளர்களும் ஞானிகளும் சாதி நிற வேறு பாடற்ற ஒரே மனித இனத்தின் ஆத்மிக முன்னேற்றத்திற்காகப்

பாடுபட்டு வந்திருக்கும் உலகச் சமயக் கோட்பாடு இதுவேயாகும். குறுகிய சிந்தனைப் போக்குக்களும், தனிப்பட்ட நம்பிக்கைகளும், உண்மையான கடவுளைப் பற்றிய சத்திய நெறியினின்றும் மனித குலத்தைத் திசை மாறச் செய்துவிடுகின்றன. பரம்பொருளை அடைதற்கு ஒரு நெறியைப் பின்பற்றிச் செல்ல வேண்டியது இன்றியமையாதது.''

கிறித்தவ சமயமும்கூட, பாரத நாட்டு இந்து சமயத்தைப் போன்று, மனித குலத்தையே, உயிர்த்தொகுதியையே இறையருள் சுரக்கும் இனிய நிலையமாகக் கண்டு போற்றவேண்டும் என்பதையே வற்புறுத்தும் திறன் உடையதாகத் திகழ்தல் இங்கு ஒப்பிட்டு நோக்கத்தக்கது.[2] பரம்பொருளை அடையும் பாதை மக்கட் குலத்திற்கு எதிரிடையான ஒன்றன்று; மக்களுக்குத் தயவுடன் தொண்டு செய்து இரக்கம் காட்டி, அன்பு செலுத்தி இன்பம் காண்பதே இறைவனை அடைவிக்கும் எழில்மிகு திருநெறி. இந்த நெறியில்தான் வடலூர் அடிகளார் சமரச சுத்த சன்மார்க்கம் என்னும் இயக்கத்தைத் தோற்றுவித்து உலகிற்கு வழங்கியருளினர்.

**சன்மார்க்க அமைப்பு :**

ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை என்பதுதான் சமரச சன்மார்க்கத்திற்கு அடிப்படை என்று கூறுவது தவருகாது. ''சன்மார்க்கம்'' என்ற சொல்லாட்சி சமயஉலகிற்கு அடிகளார் புதியதாகப் படைத்து வழங்கிய ஒன்று அன்று. சைவ சமயத்தில், சிவபரம்பொருளை வழிபடும் நால்வகை நெறிகளில் நான்காவது நெறியாகச் சைவ சமயச் சாத்திரம் சன்மார்க்கத்தைக் குறிப்பிடுகின்றது. தாசமார்க்கம் (சரியை), புத்திரமார்க்கம் (கிரியை), சகமார்க்கம் (யோகம்), சன்மார்க்கம் (ஞானம்) என்பன அவை.

எல்லாம் வல்ல ஆண்டவன் நம்மீது தனிப்பெருங்கருணை படைத்த அருளாளன்; அவனை அடையும் இம் மார்க்கங்களில் செல்ல வேண்டுவதொன்றே உயிர்களின் கடன். எந் நெறியிற்

---

2. "Christian mysticism is the doctrine, or rather the experience, of the Holy spirit,—the realization of human personality as characterzed by and consummated in the indwelling reality of the spirit of christ, which is God"

—R. C. Moberby-Mysticism in Religion-Rev. Dr. W. R. Inge, p. 25.

சென்றாலும் ஈசனை அடைந்திடலாம். ஆங்கிலப் புலவர், எக்கார்ட் இயம்புவது போன்று, "கடவுள் நம்மை ஆட்கொள்ள எப்போதும் ஆயத்தமாக இருக்கின்றார். நாமே நம்மை ஆயத்தப்படுத்திக் கொள்ளாமல் உள்ளோம். அயரா இன்ப விருந்தளிக்க அவன் உள்ளான். நாமே விருந்துண்ண விழைந்திடாது உள்ளோம்"[3] அடிகளார், கூவி அழைத்துத் தம் சுத்த சன்மார்க்க நெறிவழி அனைவரையும் அவ் வருணெறிக்கு அழைத்துச் செல்கின்றார் என்பது மிகையாகாது.

எல்லாக் கலைகளும், புராணங்களும் வேத சிவாகமங்களிலுள்ள கரும காண்டங்களும், ஏனைய நூல்களும், மற்றைச் சமய நூல்கள் பிறவும் ஆராய்ந்து, பல வழியிலும் தெரிகின்ற பொருள்கள் எல்லாம் தாழ்வுடையது என்று கண்டு கழித்து, மேலாகிய பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களையும் தடத்த விலக்கணத்திலே வைத்து வகுத்து உணர்த்தி, அம் மூன்றனுட் பதிப்பொருள் ஏனைய பாச, பசுக்களினும் மேலாதல் இனிது விளங்கச் சொரூப இலக்கணத்தில் வைத்துணர்த்துதலாகிய நல் வழிக்கேதுவாகிய ஞானகாண்டத்தை ஓதல் கேட்டல்களுடன் சிந்தித்து, புறத்தொழில் அகத்தொழில் இரண்டுமின்றி, அறிவுத் தொழில் மாத்திரையானே, அம் மூன்று திருமேனிக்கு மேலாய், காண்பான், காட்சி, காணும் பொருள் என்ற பாகுபாட்டிற்கு இடமின்றி அத்துவிதமாய் நிறைந்து நிற்கின்ற சிவபிரானிடம் செய்யும் வழிபாடு, இத்தகு சன்மார்க்க நெறியிலே பயின்றோர் சிவசாயுச்சியமாகிய பரமுத்தியை எய்துவர் என்கின்றது சிவஞானசித்தியார். சைவசித்தாந்த சாத்திரம் கூறும் இக் கருத்து இனிது உணரத் தக்கது. சைவசித்தாந்தம் சமயமாகவும் தத்துவமாகவும் விளங்கும் மாண்புடையது. தத்துவ நீர்மையைக் கட்டிக் காப்பதுடன், சமயத்தை உலக நல்வாழ்விற்கான உயர் நோக்குடன் ஒளிர வைத்திருப்பது இச் சமயமே. அன்புச் சமயமாக உள்ள அருட்சமயம், எல்லோரும் இசைந்து கொள்ளற்கேற்ற தத்துவக் கூறுகளை உடைய தனிப்பெரு நெறியாக சைவசித்தாந்தம் உள்ளது.[4]

---

3. "God is always ready, but we are unready : he is at home, we are strangers" (Eckhart)

—Ibid. p. 122.

4. "Saiva Siddhanta is an excellent example of what religion can do preserve the freshness of philosophy, and of what philosophy can do to make religion universal. Saiva

இது வள்ளலார் ஆழ்ந்து கற்று உணர்ந்த அநுபவமே ஆகும்; சைவசாத்திர கருத்துக்களை ஆங்காங்கு வழுவாமற் கூறி மகிழ் கின்ருர் அடிகளார்.

**ஆறந்தப் பொது நெறி :**

சைவசமய நூல்களைப் பழுதறக் கற்றவர் அடிகளார். நால்வர் அமுத வாக்குக்களில் ஆழ்ந்த ஈடுபாடும் பக்தியும் உடையவர். திருமூலர், தாயுமானவர் ஆகிய அருளாளர் நூல்களில் தோய்ந்த நெஞ்சினர். ஆதலின் சமரச உணர்வில் அடிகளாருடைய கனிந்த ஆர்வமே அவரது சன்மார்க்க நெறிக்கு வித்தாகியது. எல்லாம் வல்ல பரம்பொருளை அருட்பெருஞ்சோதியாகப் போற்றி ஞர் அடிகளார்; சமயங்களையும் மதங்களையும் கடந்த சமரச சன் மார்க்கம் இச் சோதி வழிபாட்டினுலேயே உருவாயிற்று என்று கூறுவது தவருகாது.

ஆறு அந்தங்களிலும் விளங்குகின்ற மெய்ப்பொருள் ஒன்றே என்பர் அடிகளார். கலாந்தம், யோகாந்தம், போதாந்தம், நாதாந்தம், வேதாந்தம், சித்தாந்தம் என்பன அடிகளார் குறிப் பிடும் ஆறு அந்தங்களாம்.[5]

*"ஆறந்த நிலைகளின் அனுபவ நிறைவே*
*அதுவது வாவொளிர் பொதுவுறு நிதியே"*

இந்த மெய்ப்பொருளைப் பற்றிய அருட்பொது நெறியாகவே சமரச சுத்த சன்மார்க்கத்தை அடிகளார் கருதினுர். "உலகம் அழிவுப் பாதையில் விரைந்து சென்றுகொண்டிருக்கின்றது. இந் நிலை மாறி உலகம் உய்வதற்கு வழி யாது என்று மேனுட்டுச் சான் ருேர் சுவைட்சர் ஆராய்ந்து பார்த்து 'உயிர்கள் வழிபடத்தக்க

---

Siddhanta is both Samaya and siddhanta. It is a profoundly religious approach to the fundamental problems of 'perennial philosophy.' "The religion of Saiva Siddhanta is a religion of love. Its philosophy is a philosophy of Realism"-"Saiva Siddhanta as Religion and Philosophy."

—K. Seshadri, Tamil Culture, vol. viii, No. 3. p. 172.

5. *சற்குருமணிமாலை-6; அருள் விளக்கமாலை-10; அனுபவமாலை-43; சிவானந்தத்தழுந்துதல் 1-10. விரிவான விளக்கத்தை, "இராமலிங்க அடிகள் வரலாறு" (ஊரன் அடிகள்) பக். 252-256ல் காணலாம். (1971).*

புனிதம் வாய்ந்தவை என்ற எண்ணமும் செயலிலே சீரிய அன்பும் வேண்டற்பாலன' என்று முடிவு காண்கிறார். அடிகளாரது சீவகாருணியக் கோட்பாடு இவ் வுயிரிரக்கத்தை அடிப்படையாகக் கொண்டதே ஆகும்.

**சாகாச் சித்தி :**

அடிகளார் சாகா நிலையைப் பற்றிப் பேசுகின்றார். 'மரணம், பிணி, மூப்பு, பயம், துன்பம் முதலிய அவத்தைகள் எல்லாவற்றை யும் தவிர்த்து இத் தேகத்தையே நித்திய தேகமாக்கி என்றென்றும் அழியாத பேரின்ப சித்திப் பெருவாழ்வில் என்னை வாழ்வித்தல் வேண்டும். இத் தேகத்தைப் பெற்ற எல்லாச் சீவர்களுக்கும் எனக்கறிவித்த வண்ணமே அறிவித்து அவரவர்களையும் உரிமை யுடையவர்களாக்கி வாழ்வித்தல் வேண்டும்', என்று இறைவனிடம் அடிகளார் வேண்டுகின்றார்.[6] அன்புருவம், அருளுருவம், அறிவுருவம் ஆகிய மூன்றையும் பெற்றனை யென்று மாணிக்கவாசகரை அடி களார் போற்றிப் பாடுவது மறக்கவியலாதது. இவ்வுடலையே அழியாமல் நிலைபெறச் செய்யும் சித்து ஆற்றலைச் சாகாக்கலை என்றனரா, அன்றிப் பிறவா நிலை என்பதனையே சாகாக்கலை என்றனரா என்பது சிந்தித்தற்குரியது.

**சன்மார்க்க அடி நிலை :**

இனி, அடிகளார் சைவசமய நெறியில் உரைக்கப்படும் தாசமார்க்கம் முதலிய நான்கற்கும் தம்முடைய தூய அறிவால் புது விளக்கம் கண்டிருக்கின்றார் என்பது அறிதற்குரியது. எல்லா வுயிர்களையும் தன்னுடைய அடிமையாகப் பாவித்தல் தாசமார்க்கம் என்றும், எல்லாவுயிர்களையும் தன்னுடைய மகனாகப் பாவித்தல் சற்புத்திர மார்க்கம் என்றும், எல்லாவுயிர்களையும் தன்னுடைய தோழனாகப் பாவித்தல் சகமார்க்கம் என்றும் எல்லாவுயிர்களையும் தன்னைப்போல் பாவித்தல் சன்மார்க்கம் என்றும், குறிக்கும், அடிக ளார், "இது சீவநியாயம்" எனக் குறிக்கின்றார். பழைய மரபில் சொல்லப்பட்டு வருவதைத் "தெய்வநியாயம்" என்று குறித்து, அதனின் வேறாக இப் புதிய விளக்கத்தைத் தருகின்றார் அடிக ளார்.[7] இதுவே சமரச சன்மார்க்க அறநிலையாதல் காணலாம்.

(தொடரும்)

---

6. கலைக்களஞ்சியம். பக். 32-33.
7. இராமலிங்க அடிகள் வரலாறு, பக். 266.

# இலக்கணம் ஏன்?

[கவிஞர் மயிலை முத்தெழிலன்]

"இன்பம், இன்பம், இலக்கணமே;
இனிதாய்க் கற்ருல் அரைக்கணமே!"

என்ருர் தமிழ்நெறிக் காவலர் பேராசிரியர் மயிலை சிவமுத்து. ஆனல், இவ்விலக்கணத்தை எட்டிக் காயாய் எண்ணிப் பெரும்பாலோர் தட்டிக் கழிக்கின்றனர். எல்லாரும் இலக்கியத் தேனைச் சுவைக்கத் துடிக்கின்றனர். அவர்களால் அத் தேனை ஒழுங்குற முழுமையாகச் சுவைக்க முடியவில்லை. உலகிலுள்ள மொழிகளில் தமிழ்மொழி ஒன்றே, இலக்கணமும்—இலக்கியமும் இணைந்திருக்கின்ற சீரிய மொழி எனலாம்.

இலக்கணக் கல்வியின்றி இலக்கியம் படிக்க முயன்ற ஒருவன் முழங்கு+திரை என்பதை முழம்+குதிரை என்று படித்துப் பொருள் விரித்ததாக ஒரு கதையும் உண்டு. கல் தோன்றி மண் தோன்ருக் காலத்து, முன் தோன்றிய மொழியாக இருந்தும் தமிழ் இன்றும் இளமையோடு இருக்கின்றதெனின் அதற்குக் காரணம் அதன் இலக்கணமே. பொதுவாகக் கூறின், மொழிக் கல்விக்கு விழியாய் இருந்து வழிகாட்டுவது இலக்கணம் எனலாம். பண்டை நாளில் மாக்களாக உழன்ற மக்கள், ஒலி எழுப்பி உள்ளத் துண்மைகளை ஒழுங்குபடுத்தி மொழியக் கற்றனர். அவ்வாறு மொழியப்பட்டதையே மொழி என்கிருேம். மொழியப்படுவது மொழியென்ருலும் 'ஒலி வடிவம்—வரி வடிவம்' ஆகிய இரண்டையும் இணைத்தே மொழியென்று, இன்று உரைக்கின்ருேம். எனவே மொழிக்கு முதற் காரணம் 'ஒலி' எனலாம். இதனையே நன்னூலார்,

'மொழிமுதற் காரணம்ஆம் அணுத்திரள் ஒலி'

என்றுரைக்கின்ருர். எக் காலத்திலும் ஒலி பொருளற்றதாக இருந்ததில்லை. கடுஞ்சினத்தைக் காட்ட ஒருவகை ஒலி, களிப்பைக் காட்ட ஒருவகை ஒலி, அச்சத்தைக் காட்ட ஒருவகை ஒலி, அழைக்க ஒருவகை ஒலி என்று ஒலி நிலைமைக்கேற்ப நீண்டும்—குறுகியும் பலவகைகளில் ஒலிக்கப்பட்டு, அவையே எழுத்துக்களாகவும் சொற்களாகவும், மாற்றம் பெற்றன.

எழுத்துக்கள் எனப்படும் பொழுது, அவை ஒலிகளின் அடையாளச் சின்னங்கள் ஆகும். அச் சின்னங்கள் பிற்காலத்தில் இன்ன எழுத்துக்கு இந்தச் சின்னம் என்று வரையறுக்கப்பட்டன.

எழுதப்படுவது எழுத்து என்கிறோம். ஆனால், ஒரு காலத்தில் எழுத்துக்களே எழுதப்படவில்லை. தீட்டப்பட்டன. ஆம், அவ்வவ் வொலி குறிக்கும் பொருள்களை ஓவியங்களாகத் தீட்டித்தான் உணர்த்தியிருக்க முடியும். அவ் வோவியங்களே பிற்காலத்தில் தேய்ந்து குறுகி எழுத்துக்களாக மாற்றம் பெற்றிருக்க வேண்டும். ஏனெனில் ஒலி எக் காலத்திலும் ஒரே தன்மையதாய் இருந்து வருகிறது. எடுத்துக்காட்டாக 'ஓ' என்ற ஒலி என்றும் 'ஓ' என்று தான் ஒலிக்கப்பட்டு வருகின்றது.

ஆனால், கல்வெட்டுக்களில் காணப்படும் எழுத்துக்களுக்கும், இன்றைய எழுத்துக்களுக்கும் அமைப்பு முறையிலேயே பல வேறு பாடுகள் காணப்படுகின்றன. இதிலிருந்து ஒலி வடிவமும் - வரி வடிவமும் பிற்காலத்தில் இன்ன ஒலிக்கு இன்ன எழுத்து என்று உறுதிப்படுத்தியிருக்க வேண்டும். 'க' என்று எழுதி 'அ' என்று ஒலித்தால் தவறு என்று நாம்தான் கூறுகிறோமே ஒழிய, அதே 'க' வை 'அ' என்ற ஒலிக்கு அடையாளமாகக் கொண்டால்—அனைவரும் ஏற்றுக்கொண்டால், 'கம்மா' என்று எழுதி 'அம்மா' என்று ஒலிக்கலாமன்றோ! ஆனால், நாம் அப்படி எழுதுவதில்லை. 'அ' என்பதைத்தான் 'அம்மா' என்ற சொல்லுக்கு முன் எழுதி வருகின்றோம். 'அம்மா' என்று எழுதுவதுதான் சரி என்கின்றோம். இன்ன ஒலிக்கு இன்ன எழுத்து அடையாளம் என்று வரையறுத்து விட்டோமே, அதுதான் இலக்கணம். மற்றொன்றும் நாம் அறிந்து கொள்ளவேண்டும். அஃதாவது எழுத்து என்பது ஒலியிலும் உண்டு. இதிலிருந்து எழுதப்படுவது எழுத்து என்பதைவிட, ஒருசொல் எழுவதற்குக் காரணமாய் இருப்பது எழுத்து எனலாம். அவை மொழியியல் அறிஞர்கள் ஆராய்ச்சிக்குரியவை, அவற்றை அப்படியே விட்டு விடுவோம்.

ஒலியினின்றே எழுத்துக்கள் தோன்றுவதற்குச் சொற்களே அடிப்படைக் காரணங்களாகும். அதைப் போன்றே சொற்றொடர்கள் தோன்றுவதற்கும் சொற்களே அடிப்படை என்பதை அனைவரும் அறிவோம்.

எவ்வாறிருப்பினும் மொழி மண்ணில் விதைக்கப்பட்ட எண்ண விதைகளால்தான் இலக்கியமென்னும் இன்ப மலர்கள் தோன்றியுள்ளன. இம் மலர்களிலிருந்து எடுக்கப்பட்ட தேனே, இலக்கணம் எனலாம். புலவர் பெருமக்களாகிய தேனீக்கள் மலர்கள்தோறும் சென்று, சிறுகச் சிறுகத் திரட்டித் தந்த தேனின் சுவையும், இன்றியமையாமையும், உண்டு களித்தவர்க்கே நன்கு புரியும். இதனால்தான் புலவர் பெருமக்கள்,

'எள்ளினின்று எண்ணெய் எடுபடுவது போல
இலக்கியத்தினின்று எடுபடுவது இலக்கணம்'

என்றனர். எள்ளைச் செக்கிலிட்டு ஆட்டி, எண்ணெய் எடுப்பது என்பது எளிதான செயலன்று. அதைப் போன்றே இலக்கிய எள்ளை, ஆராய்ச்சிச் செக்கிலிட்டு ஆட்டி இலக்கண எண்ணெய் எடுப்பதும் எளிதான செயலன்று. எவ்வாறு எள்ளின்றி எண்ணெய் இல்லையோ, அதைப் போன்றே இலக்கியமின்றி இலக்கணமும் இல்லை. வேறு வகையாகவும் கூறலாம். இலக்கியத்தை உடல் என்றால், இலக்கணத்தை உயிரென்று உரைக்கலாம். உடலின்றி உயிருக்கு உயர்வில்லை; உயிரில்லா உடலுக்கு ஒரு மதிப்பும் இல்லை. எனவே, இலக்கியமும், இலக்கணமும் இணைந்து நடத்துவதே மொழியென்னும் இல்வாழ்க்கை எனலாம்.

இலக்கணம் என்பது என்ன? ஒரு வரம்பு. வாழ்க்கையை இவ்வாறு நடத்த வேண்டும் என்பது வாழ்க்கை இலக்கணம் என்பது போல, மொழியை இம் முறையில் பயன்படுத்த வேண்டும் என்பது மொழியிலக்கணம். அந்தந்த இடத்தின் தட்ப-வெப்ப நிலைக் கேற்றவாறு ஒலிகள் ஒலிக்கப்படுகின்றன. அந்தந்த ஒலிகள் அந்தந்த இடத்தின் மொழிகள் என்கிறோம். ஒரு குடும்பப் பழக்க வழக்கங்கள் வேறு ஒரு குடும்பத்தின் பழக்க வழக்கங்கட்கு வேறுபட்டிருக்கலாம். அல்லது சிறு மாற்றமே பெற்றிருக்கலாம். அதைப் போன்றே ஒலிகளும் ஓரிடத்தின் ஒலிக்கும், பிறிதோர் இடத்தின் ஒலிக்கும் சிறிது சிறிதோ, முற்றிலுமோ மாறுபட்டிருக் கலாம். ஆனால் எவ்வாறு எல்லார்க்கும் ஒரு பொதுவான வாழ்க்கை முறை, உண்ணுதல், உறங்குதல், காதலித்தல், மணத்தல், போரிடுதல், ஒன்றுபடுதல் போன்றவை உண்டோ, அதைப் போன்றே எல்லா மொழிகட்கும் பொதுவான ஓர் இலக்கணம். அவ்விலக்கணத்திற்கு உட்படாதது மொழியாக இருக்காது, கூச்சலாக இருக்கும்.

உலகில் முதன்முதல் மாந்தன் தோன்றிய புலமே, தென்புலம் எனப்படும் தமிழ்ப்புலம் தான். இங்குதான் முதன்முதல் மொழி தோன்றியது. எனவே இங்குதான் முதன்முதல் இலக்கணம் தோன்றிற்று. உலகில் முன் தோன்றி மூத்த, தமிழின் இலக்கியங்களே, அனைத்து இலக்கணத்திற்கும் வழிகாட்டியாய் இலங்கிற்றெனலாம். தமிழில் முதன்முதல் தோன்றிய நூல் இன்னது என்று வரையறுத்துக் கூற முடியாதெனினும், அகத்தியத்தைத் தமிழில் தோன்றிய முதல் நூலாகக் கொள்ளலாம். ஆனால், அது காலக் கொடுமைக்காளாகி, ஞாலத்தில் இல்லா நிலையெய்தினும், அதன் வழிவந்த தொல்காப்பியம் ஒல்காப் புகழொடு நின்று

நிலவுகிறது. இந் நூலே இன்று தமிழுக்கிருக்கும் ஆதாரமான இலக்கண நூலாகும்.

நூலெனப்படுவது 'இலக்கண நூலே' என்பர் புலவர் பெருமக்கள். இவ்விலக்கணத்தின் இன்றியமையாமையைச் சுருங்கக் கூறின்,

**'பேச்சு வழக்கின் பிழைகள் சுருங்கவும்;**
**எழுத்து வழக்கின் இறுக்கம் அவிழவும்**
**மொழிநடை ............'**

நடத்துதற்கே எனலாம். எனினும் இலக்கணத்தின் பயன் இது மட்டுமன்று!

ஒரு மொழியினை ஆறெனக் கொண்டால், அதனை ஒழுங்குபடுத்திச் செலுத்தும் கரைகளாகவும், இலக்கணத்தைக் கூறலாம். இலக்கணம் காலத்திற்கேற்ற அமைப்புக்களைப் பெற்றாலும், அடிப்படை உருவத்தில் மாற்றம் இல்லாத ஒன்றாக இலங்குவது. இலக்கியம் வாழ்ந்த வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டுவது என்றால், இலக்கணம் வாழவேண்டிய வழியைக் காட்டுவது எனலாம். நேற்றைய மக்கள் வாழ்ந்த வாழ்க்கையும், இன்றைய மக்கள் வாழும் வாழ்க்கையும் ஒரு சிலவற்றில் வேறுபட்டிருந்தாலும், அடிப்படை வாழ்க்கையில் உள்ள ஒற்றுமையைக் காக்கவல்லதே இலக்கணம் எனலாம். மற்றும், எச் செயலும் செய்து முடிக்கப்பட்டது என்பதைவிடச் சிறப்புறச் செய்யப்படவேண்டும் என்றெண்ணுவதே எல்லோரின் எண்ணம். அச்சிறப்புக்கு வழிகாட்டியே இலக்கணம் எனலாம். சிறந்த வாழ்க்கை நடத்துபவரை, நமக்கு இலக்கணமாகத் திகழ்கின்றார் என்று கூறுவது உலக வழக்கமன்றோ? எனவே, வாழ்க்கை இலக்கணம் போன்றதே மொழி இலக்கணமும் ஆகும். நேற்றைய இலக்கியக் கருத்துக்கள் இன்று முற்றும் பயன்படாமல் போகலாம். ஆனால், இலக்கிய அமைப்பு இன்ன வகையில் இருக்கவேண்டும் என்பது அன்று முதல் இன்று வரை எல்லாராலும் ஏற்றுக்கொள்ளத் தக்கதாகத் திகழ்கின்றது. இலக்கணம் தோன்றியமைக்குக் காரணமே ஒழுங்கு முறை எனலாம்.

இன்ன முறையில் வாழவேண்டும் என்பது போன்று, இன்ன முறையில் எழுதவேண்டும் என்று நம்முன்னோர் வரையறை செய்துள்ளனர். ஒலி வடிவம் ஒழுங்கு செய்தபின்னரே எழுத்து வடிவம் தோற்றம் பெற்றது எனலாம். ஓசையின் வழியே மொழி பிறந்ததாகலின், முதன் முதல் மொழி இசை வடிவாகவே இருந்தது. அதனையே செய்யுள் என்றும், யாப்பு என்றும் கூறு

கின்ருேம். முதன்முதல் தமிழன் இசை வடிவிலேயே மொழிந்த காரணத்திஞல், இறைவனேயும் இசை வடிவினஞகக் கண்டான். இசையையே புகழாகப் பொருள் கொண்டான். பண்டைத் தமிழ் மொழி இசை வடிவாகவே இருந்த உண்மையைத் தாலாட்டு முதல் ஒப்பாரி வரையுள்ள வாய்மொழி இலக்கியங்கள் எடுத்துக்காட்டு கின்றன. எனவே, பண்டைய தமிழ்மக்கள் இசை இலக்கியத் திற்கே இலக்கணம் கண்டனர். இன்ன அளவில் பாடவேண்டும், இன்ன ஓசையில் பாடவேண்டும், இந்த வேளேயில் இந்த இசை பாடவேண்டும், இந்த நிகழ்ச்சிக்கு இந்த முறையில் பாட வேண்டும் என்றெல்லாம் வகுத்தனர். இவ்வாறு வகுக்கப்படுவதே இலக்கணம் எனலாம்.

பகுத்துண்டு வாழ்பவரால்தான் பாங்குற வாழமுடியும். இதனேத்தான் திருவள்ளுவர்,

**"பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்**
**தொகுத்தவற்றுள் எல்லாம் தலை"**

என்று குறிப்பிடுகின்ருர். ஒரு முறையில் பார்த்தால் திருக்குறளும் ஓர் இலக்கண நூலே என்று கூறலாம். இது வளமுற வாழ்தற்கு வழிகூறும், வாழ்க்கை இலக்கண நூலாகும். உள்ளத்தி னின்று இயற்கையாகத் தோன்றுகின்ற எண்ணங்களால் தோன் றியது இலக்கியம் என்ருல், இப்படிப்பட்ட இலக்கியங்களிலிருந்து இப்படித்தான் இருக்க வேண்டும் என்ற முடிவு கண்டு, உறுதிப் படுத்தி வரம்புண்டாக்கத் தோற்றுவிக்கப்பட்டதே இலக்கணம் எனலாம். உலகில் உள்ள எல்லா மொழிகளுக்கும் இலக்கணம் உண்டு. ஆஞல், அவற்றில் பெரும்பாலானவை இடம்—பொருள்—காலத்திற்கேற்ப வளேந்து கொடுக்கின்றன. தமிழிலக் கணம் ஒன்றே, தமிழைப் போன்று என்றும் மாருமல் நின்று நிலேத் திருப்பது. எனவே, 'சீரிளமைச் செந்தமிழ் இலக்கணமே சிறந்தது' என்று கூறலாம்.

இந்தியாவில், 179 பெரு மொழிகளும், 544 கிளே மொழிகளும் உள்ளன என்று பைந்தமிழ்ப் புலவர் பரந்தாமஞர் கூறுகின்ருர். அவற்றுள் தமிழ் ஒன்றே, இசையார்ந்த இலக்கணம் படைத்த இனிய மொழியாகும். அன்னேத் தமிழ் அன்றும்—இன்றும்—ஏன், என்றும் நின்று நிலவுகின்றதெனின், அதற்கு அடிப்படைக் காரணம், அதற்குள்ள இலக்கண வரம்பே என்பதை அனேவரும் ஒரு முகமாக ஏற்றுக்கொள்வர். இனிமை என்ற பொருள் கொண்ட தமிழின் இன்பச் சுவையை முழுமையும் சுவைக்க விழைவோர் ஒவ்வொருவரும் இலக்கணக் கல்வியைக் கற்க வேண்டியது இன்றியமையாததாகும்.

இலக்கணம் மொழிக்கு அழகூட்டும் சிறந்த அணிகலம் என்றும் கூறலாம். செந்தமிழ் மொழியின் சிறப்புக்கு உரிய காரணங்களில் 'அழகு' இலக்கணமும் ஒன்று. கம்பர் தாம் இயற்றிய இராமாயணத்தில், 'மருதநிலச் சிறப்பைப்' பாட விழைந்தபோது, அங்குள்ள இயற்கை நிகழ்ச்சிகளுக்கு வேறு ஒரு பொருள் கண்டு கூறிப் புகழ்வது மனத்துக்கு மகிழ்ச்சியை ஊட்டுவதல்லாமல், நில வளத்தையும் அழகாக விளக்குகின்றது.

*"தண்டலை மயில்கள் ஆடத்*
*தாமரை விளக்கம் தாங்கத்*
*கொண்டல்கள் முழவின் ஏங்கக்*
*குவளைகண் விழித்து நோக்கத்*
*தெண்டிரை எழினி காட்டத்*
*தேம்பிழி மகர யாழின்*
*வண்டுகள் இனிது பாட*
*மருதம்வீற் றிருக்கும் மாதோ!"*

என்ற இவ் வழகிய பாடலில் குறிப்பிட்டுள்ள நிகழ்ச்சிகள் அனைத்தும் மருதத்திணைக்குரிய நிகழ்ச்சிகள் என்பதையும் உணர்ந்து கொள்ளல் வேண்டும்.

மொழியிலக்கணத்தில் 'காலங் காட்டுதல்' எல்லா மொழிகளுக்கும் அடிப்படையான ஒன்று. அவ்விலக்கணம் கற்காமல், எண்ணத்தை முழுமையாக—விளக்கமாக—சரியாக எடுத்துக் காட்ட முடியாது. எடுத்துக்காட்டாக 'அவன் வந்தான்' என்பதை 'அவன் வருகிறான்' என்று குறிப்பிட்டால், பொருள் மாறுபடு மன்றோ! இதைப்போன்றே, எண், பால், இடம் போன்றவற்றையும் கற்காமல் நம்மால் நம் எண்ணத்தை ஒழுங்காக வெளியிட்டு, ஒருவர்க்கு உணர்த்த முடியாது. இவற்றில் அடிப்படையானவற்றை நாம் ஏட்டில் கற்காமலேயே, பழக்கத்தின் வாயிலாக நம்மையறியாமலேயே கற்றுவிடுகிறோம். இவற்றின் நெறிகளைக் கற்கும்போது தான் இலக்கணம் எட்டிக் காயாய்ச் சிலர்க்குத் தோன்றுகிறது. உண்மையில் கூறப்போனால், இலக்கணம் கற்பிக்க வேண்டிய முறையில் கற்பித்தால், சுவையாக இருப்பதுடன் அனைவரும் எளிதில் கற்றுக்கொள்ளலாம்.

ஆனால், இலக்கணக் கல்வி மட்டும் கல்வியாகாது. இலக்கணம் பயில்வது இலக்கியத்தை முழுமையாகத் துய்ப்பதற்கேயாம். எனவே, மொழியைக் கற்க விழைவோர்—மொழிந்திட விழைவோர் இலக்கியக் கல்வியையும், இலக்கணக் கல்வியையும் கற்க வேண்டியது இன்றியமையாததாகும். இலக்கியம் கற்று—இலக்கணம் பயில்வோம். இலக்கணம் பயின்று—இலக்கியம் படைப்போம். தமிழ் வளரும்—தமிழர் வாழ்வர் — தமிழ்நாடு வாழும் — தமிழன்னை மகிழ்வாள்.

———



இவ்வாண்டு பொன்விழாக் கொள்ளும் பொலிவினர்
கோவை - சிரவணபுரம் கௌமார மடாலயத் தலைவர்

**தவத்திரு சுந்தரம் அடிகள்**

29—11—1978



இவ்வாண்டில் நூற்றாண்டுவிழாக் கொள்ளும் மறைந்த மாமேதை

மூதறிஞர் இராஜாஜி

10—12—1978

# மறைந்த மாமேதை
# சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார்
# நூற்றாண்டு விழா

இந்திய விடுதலைப் போராட்டத்தின் முன்னணித் தலைவர்களுள் ஒருவரும் விடுதலைபெற்ற இந்தியத் துணைக்கண்டத்தின் முதல் ஆளுநர்தலைவரும், உலகப்புகழ் வாய்ந்த தமிழ்நாட்டுப் பெருமக்க ளுள் ஒருவரும், கடந்த 1972ஆம் ஆண்டில் தமது 94ஆம் அகவை யில் காலஞ்சென்றவருமான மூதறிஞர் இராஜாஜி அவர்களின் நூற் றாண்டு விழா இவ்வாண்டில் நடைபெறுகின்றது.

தகடூர் மாவட்டத்துத் தொரப்பள்ளி என்னும் சிற்றூரில் திரு. சக்கரவர்த்தி ஐயங்கார் அவர்களின் நன்மகனாக 1878 இல் பிறந்த இராஜாஜி சட்டப்படிப்பை முடித்து வழக்கறிஞராக வாழ்க்கையைத் தொடங்கினார்; சேலம் நகராட்சித் தலைவர் பதவியைக் கைப்பற்றிப் பொதுப்பணியில் ஈடுபட்டார். 1917இல் காந்தியடிகளைக் கண்டு அவருடைய நம்பிக்கைக்கும் நட்புக்கும், பின்னாளில் உறவுக்கும் உரியவரானார்.

இந்தியாவின் விடுதலைக்கு முன்னும் பின்னும் ஆட்சி நிலையிலும் அரசியல் கட்சி நிலையிலும் பல பெரும் பதவிகளை ஏற்றுப் பணி யாற்றிச் சிறந்தவர் இராஜாஜி. அவர் சிறந்த எழுத்தாளர்; இனிய பேச்சாளர். 'சக்கரவர்த்தித் திருமகன்', 'வியாசர் விருந்து' முதலிய நூல்கள் குறிப்பிடத் தக்கன. குட்டிக் கதைகள் சொல்வதில் தனித் திறம் வாய்ந்தவர் இராஜாஜி.

உலகப் பொதுமறையான திருக்குறளில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர் இராஜாஜி. அவர் திருக்குறளில் சில அதிகாரங்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். 1938இல் இந்தியை கட்டாய பாடகாகக் கொண்டுவந்த இராஜாஜியே பின்னாளில் அதன் தீமையை யுணர்ந்து மிக வன்மையாக எதிர்த்தார்

தமது 83ஆம் அகவையில், அதுவரை வெளிநாடு சென்றிராத இராஜாஜி அவர்கள் அமெரிக்க நாட்டிற்குச் சென்று, தலைவர் கென் னடியைக் கண்டு அளவளாவினார்; அணுக்குண்டைத் தடைசெய்ய வேண்டுகோள் விடுத்தார்.

கலைஞர் மு. கருணாநிதி அவர்களை முதலமைச்சராகக் கொண்ட மேனாள் தமிழ்நாட்டரசு இராஜாஜி நினைவு மண்டபம் எழுப்பி யுள்ளது

10—12—78இல் இராஜாஜியின் நூற்றாண்டு விழா தில்லி மாநகரில் குடியரசுத் தலைவர் திருமிகு நீலம் சஞ்சீவரெட்டி அவர்கள் தலைமையில் நடைபெற்றது. இராஜாஜி நினைவு அஞ்சற்றலையை வெளியிட்டு அவர் ஆற்றிய தலைமையுரையில் இராஜாஜியின் பல்வேறு சிறப்புக்களை எடுத்துரைத்தார். இராஜாஜி தம் கால்வழியினர்க் காகப் பெரும்பொருள் திரட்டிவைத்துச் செல்லவில்லை என்று சுட்டிக் காட்டியது குறிப்பிடத்தக்கது.

தமது நம்பிக்கையில் உறுதி, தூய்மையான ஆட்சிமுறை, தம் கருத்தை மற்றவர்களிடம் வலிந்து புகுத்தாமை, தம் பதவியைத் தம் மக்கள் பயன்படுத்த வாய்ப்பளிக்காமை ஆகிய இராஜியின் இயல்பு களை இக் காலத் தலைவர்கள் பின்பற்ற வேண்டும் என்றும் குடியரசுத் தலைவர் கூறியது மிகவும் போற்றுதற்குரியது

இந்திய மக்களின் வாழ்வோடும் வளத்தோடும் இணைந்துவிட் டவர் இராஜாஜி. அவர்க்குச் செய்யும் எத்தகைய சிறப்பும் இந்தியர் அனைவர்க்கும் பெருமை தருவதாகும். வாழ்க இராஜாஜியின் புகழ் !

# ஆட்சிமொழிக் காவலர் திரு. கீ. இராமலிங்கனுர் 80 ஆவது பிறந்தநாள் விழா

ஆட்சிச் சொற் காவலர், செந்தமிழ்ச் சொல் நுணுக்கச் செம்மல், கலைச்சொற் காவலர் என்றெல்லாம் புகழப்படும் தமிழ்ப் பெரியார் கீ. இராமலிங்கனுர் அவர்களின் 80 ஆவது பிறந்தநாள் விழா 8—11—78 இல் சென்னைச் செனுய் நகரில் உள்ள அத்வைத ஆனந்த ஆசிரமத்தில் ஆசிரமத்தின் அருள் முதல்வர் திரு. அண்ணுமலை அடிகளார் திரு முன்னர் இனிது நடைபெற்றது. தமிழ்ப் பெருமக்கள் பலர் வந்திருந்து விழாவினைத் தக்கவாறு சிறப்பித்தனர்.



திரு. இராமலிங்கனுர் அவர்கள் கழகத்தோடு நீண்டகாலமாகத் தொடர் புடையவர். நகராட்சி முறை, ஆட்சித் துறைத் தமிழ், 'தமிழில் எழுதுவோம்' என்னும் கழக வெளியீடுகளின் ஆசிரிய ராகவும், திருமணம் முதல் எல்லாச் சடங்குகளையும் தமிழிலேயே நடத்தவேண்டும் என்று சொல்லாலும் செயலாலும் நடத்திக் காட்டி வருபவருமாவார்.

இவர்கள் 1947 முதல் 1954 வரை நகராட்சி ஆணையராகப் பணி யாற்றிக் காஞ்சி, குடந்தை, திருச்சி போன்ற நகரங்களிலெல்லாம் நகராட்சித் துறையில் தூய தமிழ்ச் சொற்களை அறிமுகப்படுத்தித் தமிழிலேயே ஆட்சி நடத்திக் காட்டிய செயல் வீரர் ஆவார்.

1958 இல் தமிழக ஆட்சிமொழித் தனி அலுவலராகவும், ஆட்சிச் சொல் அகராதிகளை ஆய்ந்து உருவாக்குநராகவும், தமிழக அரசுப் பணி ஆயத்தின் சார்பில் மொழித் தேர்வு நடத்துநராகவும் சிறப்புப் பணியாற்றி 1964 இல் ஒய்வு பெற்றுர். அது முதல் தமிழக அரசின் ஆட்சி மொழிக்குழு ஆணையத்தின் உறுப்பினராகவும் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்ற உறுப்பினராகவும் இலங்கினுர். 1976 முதல் மாநிலச் சட்ட ஆட்சி மொழி ஆணையத்தின் உறுப்பின ராகச் சட்டத் தமிழ்ப் பணி ஆற்றி வருகிறுர்.

இங்ஙனம் அரசியல், சமயம், மொழி ஆகிய துறைகளில் சிறந்த பட்டறிவும் மொழிப் பற்றும் மிக்குடைய இத் தமிழ்ப் பெரியார் அவர்கள் 80 ஆவது அகவையினை எய்தியிருப்பது குறித்துப் பெரு மகிழ்வெய்துகிறேம். இவர்கள் மேலும் பல்லாண்டுகள் நலமுடன் வாழ்ந்து தமிழ்த் தொண்டாற்ற அம்மை அம்பலவாணன் அருள் புரிவாளுக.

———

## கலைமாமணி, டாக்டர்
## உளுந்தூர்ப்பேட்டை சண்முகம்

தமிழறிஞரும், சிறந்த இசைப் பாடலாசிரியரும், சிறந்த பேச்சாளரும் எழுத்தாளருமான உளுந்தூர்ப்பேட்டை திரு. சண்முகனுர் அவர்கள், 16—9—1932 இல் உளுந்தூர்ப்பேட்டையில் பிறந்தவர். இவர்தம் தந்தையார் பெயர் சுப்பராயன்; தாயார் அமிர்தம் அம்மையார்.



இவர் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் பயின்று தமிழ்மொழி இலக்கியத்தில் 1960 இல் எம். ஏ. பட்டம் பெற்ருர். 1960 முதல் 1972 வரை அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் கீழ்த்திசைக் கலைத்துறையில் விரிவுரையாளராகவும், 1972-74 இல் சென்னை எஸ், ஐ. வி. இ. டி. கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவராகவும் பணியாற்றியபின் 1975 முதல் தமிழக அரசுத் தலைமைச் செயலகத்தில் பொது மொழிபெயர்ப்புத்துறை உதவி இயக்குநராகச் சில காலம் பணியாற்றினுர்.

நற்றிணையில் ஓர் இலக்கியத் திறனய்வு என்னும் தலைப்பில் ஆராய்ச்சிக் கட்டுரை எழுதி 1970 இல் எம். லிட். பட்டமும், தமிழ்ப்புதினத்தின் (நாவலின்) எழுச்சி என்ற தலைப்பில் ஆராய்ச்சி செய்து இவ்வாண்டில் டாக்டர் பட்டமும் பெற்றுள்ளார்.

1971இல் அடையாறு ஆரோக்கிய ஆசிரமம் பக்தசிகாமணி என்ற பட்டத்தையும், 1973இல் திருப்பனந்தாள் பாவலர் மன்றம் 'இசைக்கவியரசு' என்ற பட்டத்தையும், 1975இல் தமிழ்நாடு இயல், இசை நாடக மன்றம் 'கலைமாமணி' என்ற பட்டத்தையும் வழங்கிச் சிறப்பித்தன.

இவர் இயற்றிய கவிதைகள் 13 தொகுப்பு நூல்களாக வெளிவந்துள்ளன. 150க்கு மேற்பட்ட இவருடைய இசைப் பாடல்கள், இசைத்தட்டுக்களில் பதிவாகியுள்ளன. வானெலியும், தொலைக்காட்சியும் இவருடைய பாடல்களை அவ்வப்போது ஒலிபரப்பி வருகின்றன. சில பாடல்கள் திரைப்படங்களிலும் இடம்பெற்றுள்ளன. பல்வேறு இதழ்களில் இவருடைய கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

இவ்வாண்டு அக்டோபர்த் திங்களில் தமிழரசு தமிழ்ப் பண்பாட்டு நடுவம் (Tamil Cultural Centre) என்றதொரு தனித் துறை நிறுவியுள்ளது. அதனுல் 'இந்திய நாகரிகத்தில் தமிழர் பண்பு' என்னும் பொருள்பற்றி முழுதுற ஆய்வு செய்வதற்கு நல்ல வாய்ப்பு ஏற்பட்டிருப்பதும் அத் துறைக்கு முற்றிலும் தகுதிவாய்ந்த டாக்டர் சண்முகம் அவர்கள் இயக்குநராக அமர்த்தப்பெற்றிருப்பதும் பெரிதும் போற்றுதற்குரியன. பண்பிற் சிறந்த இவர் மேலும் பல சிறப்புக்களைப் பெற்றுப் பல்லாண்டு வளமுடன் வாழ அம்மை அம்பலவாணர் திருவருள் புரிவாராக.

---

# சிரவையில் நிகழ்ந்த சிறந்த முப்பெருவிழா

கோவையை அடுத்துள்ள சிரவணபுர கௌமார மடாலயம் வண்ணச் சரபம் அருள்மிகு தண்டபாணி அடிகளை அருட்குருவாகக் கொண்ட அருள்நிறை இராமாநந்த அடிகளால் நிறுவப்பட்ட திருமடமாகும்.

**பவளவிழா :**

இம் மடாலயத்தின் 70 ஆவது ஆண்டு நிறைவு விழா பவள விழாவாக 27—11—78 திங்கட்கிழமையன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது. இவ் விழாவிற்குக் கோவை வர்த்தக உயர்திரு C B. முத்துசாமி செட்டியார் அவர்கள் தலைமை தாங்கினார்கள். பண்ணிசை வாணர் திரு. திருநாவுக்கரசு இறை வாழ்த்துப் பாடினர். திரு. எஸ். சுப்பையா சிவா அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர். சிவத்திரு சிவஞான பாலய சுவாமிகள் பவள விழாவைத் தொடங்கி வைத்தனர். தவத்திரு தண்டபாணி அடிகள் நூல் நிலையத்தைத் தொழிலதிபர் திரு. நா. மகாலிங்கம் அவர்கள் திறந்து வைத்தார்கள்.

பிற்பகல் நிகழ்ச்சியில் திருவாமாத்தூர் புலவர் தி. மு. சங்கரலிங்கம் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர். தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் தொடக்கவுரை யாற்றினர். தவத்திரு முருகதாச அடிகள் விழாவிற்குத் தலைமைதாங்கி உரையாற்றினர். சில மடாலயத் தலைவர்களும் அறிஞர் பெருமக்களும் முறையே அருளுரைகளும் கருத்துரைகளும் நிகழ்த்தினர். திரு. ஆர். செங்கோட்டுவேலன் நன்றியுரை வழங்கினர்.

**மணி விழா :**

கௌமார சபையின் மணிவிழா 28 11—78 இல் மேதகு இராமநாத சேதுபதி அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. திரு D R. கார்த்திகேயன் I. P. S. வரவேற்புரை நிகழ்த்தினர். திரு நா மகாலிங்கம் அவர்கள் விழாவைத் தொடங்கி வைத்து உரையாற்றினர் புலவர் திரு பழனிசாமியவர்கள் 'அறுமுகன் திருவிளையாடல்' என்னும் நூலை அரங்கேற்றினர் மாண்புமிகு ம. பொ. சிவஞானம் அவர்கள் "தண்டபாணி சுவாமிகள்" என்னும் தலைப்பில் சிறப்புரை ஆற்றினர். திருமுருக கிருபானந்தவாரியார், அவிநாசிலிங்கம் செட்டியார், சரவண மாணிக்க சுவாமிகள் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். இவ் விழாவினை யொட்டி நாட்டிய நாடகமொன்றும் நடைபெற்றது.

**பொன் விழா :**

தவத்திரு சுந்தர சுவாமிகள் 50 ஆவது ஆண்டு பொன்விழா 29 11 78 இல் உயர்திரு S. R. S. பொன்னுசாமி செட்டியார் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. தமிழக ஆளுநர் மேதகு பிரபுதாசு பட்வாரி அவர்கள் பொன் விழா வளைவு, பாதை ஆகியவற்றைத் திறந்து வைத்தார். பின்னர் சுந்தர சுவாமிகட்குக் கலச நீராட்டு நடைபெற்றது. தமிழக ஆளுநர் சுந்தர சுவாமிகளுக்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார். பெருமக்கள் பலர் உரையாற்றினர். இவ் விழாவினை யொட்டி மலர் வெளியீடு நூல் வெளியீடு, உணவளிப்பு, கொலு வழிபாடு முதலியனவும் நடைபெற்றன. திரு. மு. பரமசிவம், B Com அவர்கள் நன்றிநவில மூன்றுநாள் விழாக்களும் இனிது நிறைவேறின.

———

## மிகப்பழைய சங்ககால நடுகற்கள் கண்டுபிடிப்பு

கோவை மாவட்டம், சத்தியமங்கலத்திற்கு அருகில் உள்ள விண்ணம்பள்ளியில், சங்ககாலத்தைச் சேர்ந்த நடுகற்கள் இரண்டும், பிற்காலப் புலிக்குத்திக்கல் ஒன்றும் ஆக மூன்று நடுகற்கள் உள்ளன. இவற்றைக் கூகலூர் வரலாற்றுப் பேரவையினர் அண்மையில் கண்டுபிடித்துள்ளனர்.

**போர்க்கல் :**

போரில் வீரமரணம் அடைந்த வீரர்களுக்கு நடுகல் எடுத்து வழிபடுவது தமிழக மரபு. பழந்தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியம் கூறும் வஞ்சித்திணைக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் முறையில் இந் நடுகல் அமைந்துள்ளது. வீரர் இருவர் எதிரிகளின் படைகளை அழித்து, மேலும் சென்று வாளோடு போரிடும் காட்சி படைப்புச் சிறப்பாக வடிக்கப்பட்டுள்ளது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய நடுகல் இது. இதனை இக் கல்லின் மழுங்கிய தன்மை மிகத் தெளிவாகக் காட்டுகிறது.

**புலிக்குடும்பத்தோடு போர் :**

இதுபோன்ற நடுகல் இதுவரை நம் நாட்டின் எந்தப் பகுதியிலும் கிடைக்கவில்லை. ஓர் ஆண் புலியுடன் வீரன் ஒருவன் போரிடுகிறான். பெண்புலி அந்த வீரனைப் பின்புறமாய்த் தாக்க முனைகிறது. இதைக் கண்ட அவ் வீரனின் நாய் பெண்புலியின்மீது பாய்ந்து அதனோடு போராடுகிறது. புலியின் குட்டியோ எதையும் கண்டுகொள்ளாமல், போரிடும் தாய்ப்புலியின் மடியில் பால் குடித்துக்கொண்டிருக்கிறது.

**புலியன்பட்டி :**

குட்டியோடு வந்த, சினம்மிகுந்த, புலிக்குடும்பத்தோடு போரிட்டு, வீரமரணம் அடைந்த அவ் வீரனுக்கும், அவனது நாய்க்கும் நினைவாக எடுக்கப்பட்ட இந் நடுகல் மிக்க எழுச்சியூட்டும் முறையில் அமைந்துள்ளது.

புலிக்குடும்பத்தை வீழ்த்திப் புகழ்பெற்றதால் இவனைப் புலியன் என்றும், இவன் பெயரால் அமைந்த ஊரே இப்போதுள்ள புலியன்பட்டி (புளியன்பட்டி) எனவும் கூறலாம். இந் நடுகல் உள்ள இடத்திற்கு அருகில்தான் (புன்செய்ப்) புளியம்பட்டி உள்ளது.

**புலிக்கல் :**

காட்டிலிருந்து ஊருக்குள் புகுந்து வந்த புலியொன்றை வீரன் ஒருவன் கொன்று தானும் மாய்ந்த புலிக்குத்திக்கல் ஒன்றும் இவ்விடத்தில் உள்ளது. இம் மூன்று கற்களும் ஏறத்தாழ ஐந்து அடி நீளமும் மூன்று அடி அகலமும், ஒரு அடி கனமும் உள்ளவை. "பீடும் பெயரும் எழுதி அதர்தொறும் பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்" என்றும், "நடுகல்......கோடுயர் பிறங்குநிலை" என்றும் வரும் புறநானூற்றுப் பாடல்களுக்கு ஏற்ப (பிறங்குநிலை-விளங்கித் தோன்றும் நிலை) ஐந்து அடி உயரத்தோடு கூடிய பெரிய கல்லை நடுகல்லாய்

அமைத்துள்ளனர். இதன் அமைப்பும் தோற்றமுமே இது சங்ககால நடுகல் என்பதைக் காட்டும் சிறந்த சான்ருக உள்ளது.

**கல்வீடு :**

இந் நடுகற்களைக் கொண்டு கல்வீடு அமைத்து, மக்கள் வழிபட்டு வந்துள்ளனர். புறத்துறை பற்றிய தமிழ் இலக்கண நூலான "புறப் பொருள் வெண்பாமாலை" கூறும் "இல் கொண்டு புகுதல்" என்ற முறைப்படி அமைக்கப்பட்டிருந்த கல்வீடு இப்போது சிதைந் துள்ளது. அதனுல் இந் நடுகற்கள் தரையில் விழுந்து கிடக் கின்றன.

தமிழ்நாட்டில் முதன்முதல் கிடைத்துள்ள சங்ககால நடுகற்கள் என இவற்றைக் கூறலாம்.

**கூ. ப. சின்னச்சாமி** — *தலைவர்*

**பொன். முகிலன்** — *செயலர்*

*தமிழக வரலாற்றுப் பேரவை*
*கூகலூர்க் கிளை*

---

## தமிழ் எழுத்துச் சீர்திருத்தம்

தந்தை பெரியார் அவர்களின் நூற்றுண்டு விழாவையொட்டி, அவர் கடைப்பிடித்துவந்த எழுத்துச் சீர்திருத்தத்தைப் பின் பற்றும் முறையில் அதனை நடைமுறைப் படுத்தியுள்ளது தமிழ் நாட்டரசு

இதுபற்றித் தமிழறிஞர்களிடையேயும், இதழாசிரியர்களிடை யேயும் பல கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன.

இப்போதுள்ள தமிழின் வரிவடிவம் பற்பல மாறுதல்களுக்குட் பட்டே வளர்ந்து வந்திருக்கிறது. எனவே, இப்பொழுது புழக்கத்தி லிருக்கும் வடிவம் மேலும் திருத்தப்பட வேண்டிய அளவுக்குக் குறைபாடுடைய தன்று. அதனை மாற்றுவதால் பெரும்பயன் ஏதும் விளையப்போவதில்லை. மாருகக் குழப்பங்களும் இழப்பு களுமே மிகுதியாகும்.

எத்தனையோ நுண்ணிய அறிவியல் துறைகளும், புதுமைக் கலைகளும் நாளும் நாளும் வளர்ந்து வருகின்றன. தமிழ் அவ் வகையில் வளம்பெற ஆவன செய்ய வேண்டியதே பெரும்பயன் விளைக்கும் அரும்பணி. எனவே, தமிழ்நாட்டரசு எழுத்துச் சீர் திருத்தத்தில் நாட்டஞ் செலுத்துவதைவிட உருப்படியான ஆக்கப் பணிகளில் ஈடுபடுமாறு வேண்டுகின்ரேம்.

---

## செய்திகளும் குறிப்புக்களும்

### முத்தமிழ்க் காவலர் 80ஆம் ஆண்டு நிறைவு விழா

திருச்சி முத்தமிழ்க் காவலர் கி. ஆ பெ. விசுவநாதம் அவர்கள் 80ஆவது ஆண்டு நிறைவு விழா திருச்சியில் அவர்களால் நிறுவப் பெற்ற புலவர் குழுவின் சார்பில் 12—11—1978 இல் அண்ணுமலைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் மதிப்புமிகு பி. எஸ். சோமசுந்தரம் அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. அப்பொழுது உயர்நீதிமன்ற நீதிபதி பு. ரா. கோகுலகிருட்டிணன் அவர்கள் கல்வித்துறையில் பயிற்சி தாய்மொழியிலேதான் அளித்தல் வேண்டும் வற்புறுத்திக் கூறினர்.

புனித யோசேப்புக் கல்லூரி முதல்வர் வணக்கத்துக்குரிய அப்பர் சி. கே. சாமி அவர்கள் தகுதி வாய்ந்த ஆராய்ச்சிக் கட்டுரைகட்குப் பரிசு வழங்கினர். தமிழைப் பயிற்சி மொழியாக எடுத்துத் தேர்ச்சி பெறும் மாணவர்கட்கு அரசு வேலைவாய்ப்பு அளிக்க வேண்டுமென்ற கருத்தினை வற்புறுத்தினர்.

முன்னுள் நலத்துறை அமைச்சர் உயர்திரு. க. அன்பழகன் அவர்கள் பழந்தமிழ் இலக்கணமாகிய தொல்காப்பியம் பற்றி வரப் பெற்ற ஆராய்ச்சிக் கட்டுரைகளை முத்தமிழ்க் காவலரவர்களிடம் வழங்கி நடுவணரசு இந்தியைத் தமிழ்நாட்டில் புகுத்துவதைத் தமிழ் மக்கள் ஒருகாலும் ஏற்கமாட்டார்கள் என்று கண்டித்துப் பேசினர்.

முத்தமிழ்க் காவலரவர்கள் தமது நன்றியுரையில் "தி. மு. கழகம் திருச்சியில் நடத்தப்போகும் இந்தி எதிர்ப்பு மாநாடு ஐந்தாவதாகும். 1961 மக்கள் தொகை கணக்கெடுப்பின்படி இந்தியா முழுவதிலும் சமற்கிருதம் பேசும் 50,000 மக்களுக்கு ஒரு பல்கலைக் கழகம் அமைக்கப் பெற்றிருக்கும்போது 5 கோடி மக்கள் பேசும் தமிழ்மொழிக்குத் தனி ஒரு பல்கலைக்கழகம் ஏன் அமைக்கக்கூடாது என்று தமிழ்நாடு மாண்புமிகு முதலமைச்சர் கவனத்துக்குக் கொண்டு வந்து விரைவிலே செயற்படுத்துதல் வேண்டு"மென்றும் கூறினர். டாக்டர் வ. சுப மாணிக்கம் அவர்கள் நன்றி தெரி விக்கவே பாராட்டுக்கூட்டம் இனிது முடிவு பெற்றது.

### 'ஞானச்சுடர்" நூல் வெளியீட்டு விழா

சட்டத்துறைத் தமிழறிஞர் திரு. மா. சண்முக சுப்பிரமணியம் அவர்கள் எழுதிய 'ஞானச்சுடர்' என்ற அரிய நூல் ஒய். எம். சி. ஏ. பட்டிமன் றததின் சார்பில் 30-11-78 அன்று வெளியிடப்பட்டது. தமிழக உயர்நீதிமன்ற நடுவர் மாண்பமை சூரியமூர்த்தி அவர்கள் நூலை வெளியிட்டுச் சிறப்புரையாற்றினுர்கள். பொதுநூலக இயக்குநர் திரு. வே. தில்லைநாயகம் அவர்களும் தினமணிச்சுடர்

ஆசிரியர் அவர்களும் நூலையும் நூலாசிரியரையும் பாராட்டிப் பேசினார்கள். டாக்டர் ஔவை சு. நடராசன் அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கிக் கூட்டத்தைச் சிறப்புற நடத்திவைத்தார்கள்.

## குழந்தைகள் நாள் விழா

பண்டித சவகர்லால் நேரு அவர்களின் பிறந்த நாளான குழந்தைகள் நாள் விழா 13—11—78இல் சென்னை மாவட்ட நடுவண் நூலக அரங்கில் நடைபெற்றது. சென்னைப் பல்கலைக்கழகத் துணை வேந்தர் பேராசிரியர் ஜி. ஆர். தாமோதரன் அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கிப் பல பதிப்பகத்தாரின் குழந்தை இலக்கியங்களை வெளியிட்டார்கள். அவற்றுள் திரு. என். கே. வேலன் அவர்கள் எழுதிய கழக வெளியீடான “உங்களுக்குத் தெரியுமா?” என்ற நூல் குறிப்பிடத்தக்கதாகும். குழந்தை இலக்கியப் போட்டியில் வெற்றி பெற்ற எழுத்தாளர்கட்கு உயர்நீதிமன்ற நடுவர் எஸ் சூரிய மூர்த்தி ஏ வி. எம். அறக்கட்டளைப் பரிசுகளை வழங்கினார். பள்ளிக் கல்வி இயக்குநர் டாக்டர் கே. வெங்கட சுப்பிரமணியம் சிறப்புரை ஆற்றினார். புத்தனேரி இரா. சுப்பிரமணியம், திரு எஸ். சுவாமிநாதன் ஆகியோர் உரையாற்றினர்.

## உயர்திரு. முன்னாள் நீதிபதி சு. மகராசன் அவர்கள் தமிழிசைச் சங்கத் தலைவராகப் பதவி ஏற்றார்

சென்னைத் தமிழிசைச் சங்கத் தலைவர் திரு தி. மு. நாராயண சாமிப் பிள்ளையவர்கள் காலமானதை யடுத்து, இச் சங்கத்தின் தலைவராக முன்னாள் உயர்நீதிமன்ற நடுவர் உயர்திரு சு. மகராசன் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்கள். தமிழ்மொழி-இசை ஆகியவற்றின் முன்னேற்றத்தில் பெரிதும் அக்கரை காட்டும் இவர்கள் இப் பதவிக்குச் சாலப் பொருத்தமுடைய தலைவராவார்கள். இவரது தலைமையில் தமிழிசை மேலும் சிறப்புறும் என நம்புகிறோம். இவர்கட்கு எமது உளமிகு நல்வாழ்த்தினைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணி அடிகளின் 140ஆவது பிறந்தநாள் விழா

26—11—78 இல் சென்னைக் கந்தகோட்டம் அருள்மிகு முத்துக் குமார சுவாமி திருக்கோயிலில் வண்ணச் சரபம் அருள்மிகு தண்டபாணி அடிகளின் 140ஆவது பிறந்தநாள் விழா சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. திருமுருகனுக்கும், ஆலய அனைத்து மூர்த்திகளுக்கும் திருமுழுக்கும் ஒப்பனையும் செய்யப்பட்டதோடு தண்டபாணி அடிகட்கு ஒப்பனை, வழிபாடு ஆகியனவும் நடைபெற்றன. அடிகள் வழிவந்த பூட்டன் புலவர் தி. மு. சங்கரலிங்கம் அவர்களால் தண்டபாணி அடிகள் வரலாறு சொற்பொழிவாற்றப் பட்டது.

## அனைத்து நாட்டுக் குழந்தைகள் ஆண்டு

ஒன்றிய நாடுகளின் அவை (UNO) 1979ஆம் ஆண்டினைக் குழந்தைகள் ஆண்டு என அறிவித்துள்ளது. குழந்தைகளின் தேவைகளைச் சிறப்பித்துக் காட்டுவது, குழந்தைகளின் உடல்நலம்— உளநலம், அறிவு வளர்ச்சி ஆகியவற்றை ஊக்குவிப்பது உறுப்புக் குறையுள்ள குழந்தைகளைப் பேணுவது ஆகியன இக் குழந்தைகள் ஆண்டின் முதன்மையான நோக்கங்களாகும்

## தமிழையும் ஆட்சிமொழி யாக்குக !

தமிழ் மொழியையும் இந்தியாவின் ஆட்சி மொழியாக ஆக்குவதற்கு அரசியல் அமைப்புச் சட்டத்தின் எட்டாவது பிரிவைத் திருத்தி அமைக்க வேண்டும் என்னும் சட்ட வரைவு ஒன்றினை 1—12—78இல் நாடாளுமன்றத்தில் தமிழக நாடாளுமன்ற உறுப்பினர் முரசொலி மாறன் அவர்கள் கொண்டுவந்துள்ளார்,

## "இதயம் பேசுகிறது" இதழுக்குக் கண்டனம்

22—10—78 நாளிட்ட 'இதயம் பேசுகிறது' என்னும் இதழில் 'தேவிதரிசனம்' என்னும் கட்டுரைத் தொடரில் சைவ சமயகுரவருள் ஒருவராகிய சுந்தர மூர்த்தி நாயனாரைக் குறித்துத் தரக் குறைவான சில சொற்றொடர்கள் காணப்படுகின்றன. இதனைக் கண்டிக்குமுகத்தான் 19-11-78 அன்று மாலை திருநெல்வேலி நகர் வ. உ. சி. தெரு, சுந்தர ஓதுவாமூர்த்தி திருமுறை மன்ற அலுவலகத்தில் திரு. அ. இராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்ற மன்றக் கூட்டத்தில் கண்டனத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. அக் கட்டுரை சைவ மெய்யன்பர்களின் உள்ளத்தைப் புண்படுத்துகின்றது என்றும் சுந்தரமூர்த்தி நாயனாரைப் பற்றித் தவறான கருத்தைப் பரப்புவதாகும் எனவும், இச் செயலை மன்றம் வன்மையாகக் கண்டிப்பதாகவும் அத் தீர்மானங்கள் கூறுகின்றன.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் பரல்-௩, ௧௪௩ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | |
|---|---|
| உயர் திரு வ. சுப்பையா பிள்ளை (கழக ஆட்சியாளர்—நவ. 78) | ரூ. 10 00 |
| ,, ஆ. சுப்பையா பிள்ளை (கழக மேலாளர்—நவ. 78) | ரூ. 5 00 |
| மதுரை பேராசிரியர் சொல்விளங்கும் பெருமாள் | ரூ. 110 00 |
| திரு. D. திருவேங்கடம், ஆடுதுறை | ரூ. 5 00 |
| திரு. செ சுப்பிரமணியன்—நெல்லை (திரு. சு. நெல்லையப்பன் திருமண நன்கொடை) | ரூ. 5 25 |

———

# மதிப்புரை

## மறைமலையடிகள் பிள்ளைத் தமிழ்

[ஆசிரியர்: பாவலர். சி. அன்பானந்தம், வெளியீடு: மெய்யம்மை பதிப்பகம், காரைக்குடி-1. விலை: ரு 6-00.]

காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரியினர் நடத்திய மறைமலையடிகள் நூற்றாண்டு விழா பிள்ளைத்தமிழ்ப் படைப்பிலக்கியப் போட்டியில் முதற்பரிசு பெற்றது இந் நூல். பாடல்கள் எளிமையாகவும் ஓசை நயத்துடனும் அமைந்துள்ளன. பற்பல பிற மொழிச் சொற்கள் ஆங்காங்கு இடம்பெற்றிருக்கின்றன. அவை களையப்பட்டால் நூலின் தரம் மேலும் சிறக்கும். பதிப்பு முறை சிறப்பாக உள்ளது.

## திருக்குறளில் அறிவு

[ஆசிரியர்: ப. சு. மணியம், அருட்கலைக் கழகம், கோவை-1 விலை உருபா 8-00.]

திருக்குறளில் வரும் அறிவுடைமை அதிகாரத்தில் வரும் 10 குறட்பாக்களுக்கும் விருத்தியுரையாக அமைந்துள்ளது இந் நூல். அறிவுடைமைக்கு விளக்கங் கூறி இறுதியில் நூல் முழுதும் அக் குறட் கருத்துக்கு ஏற்ப வரும் கருத்துக்களையெல்லாம் விளக்கி அரிய கட்டுரைகளைப் பதினொரு தலைப்புக்களில் எழுதியுள்ளார். இதனைப் படிப்போர் திருக்குறள் முழுவதையும் படித்த பலனைப் பெறலாம். ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது.

## வான்முகி

[ஆசிரியர்: திருமதி ஆயிசா கணபதி, சிவலிங்க நூற்பதிப்புக் கழகம், ஈரோடு-1 விலை: ரு 3-00.]

ஆவியுலகில் வாழும் ஓர் அழகியின் மையலில் சிக்கித் தானும் ஆவி உருவாகிவிட்ட ஓர் இளைஞனின் வாழ்க்கையைச் சித்திரித்துக் காட்டுகிறது இக் கதை. கதையின் அடிப்படை ஓர் உண்மை நிகழ்ச்சி எனக் கூறுகிறார் நூலாசிரியர். கதைப் போக்கு களிப்பில் தோன்றிக் கலக்கத்தில் முடிகிறது.

## புத்தக விமரிசனம் (திங்கள் இதழ்)

[ஆசிரியர்: டாக்டர் ரா சீனிவாசன். 5 செல்லம்மாள் தெரு, சென்னை 30. ஆறுதிங்கள் கட்டணம் ரு. 10-00.]

தமிழில் ஒரு சில ஆண்டுகளாகப் புதுப்புது நூல்கள் வந்து குவிகின்றன. அவற்றுள் பயனுடையவை ஒரு சிலவே. அவ்வாறு பயன் மிகு நூல்களை ஆய்வு செய்யும் நோக்குடனும் புத்திலக்கிய வளர்ச்சிக்கு உதவிடவும், இவ் விதழினை ஆசிரியர் மிக அழகிய முறையில் வெளியிடத் தொடங்கியுள்ளார். இதுவரை புத்தக மதிப்புரைக்கெனத் தனியாக இது போன்ற இதழ் வெளிவரவில்லை.

---

*திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 80, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.*

*ஆசிரியர்: வ. சுப்பையா.*

## மறைமலையடிகள் பிள்ளைத் தமிழ்

### நூலாசிரியர் பாவலர் சி. அன்பானந்தம்



காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரியினர் நடத்திய மறைமலையடிகள் பிள்ளைத்தமிழ்ப் போட்டியில் முதற்பரிசு பெற்றுள்ள பாவலர் திரு. சி. அன்பானந்தம் அவர்கள் முகவை மாவட்டத்துச் சிங்கம்புணரியில் திரு சின்னமுத்துப்பிள்ளை பொன்னழகம்மாள் ஆகியோருக்கு 28—3—1932இல் மகனாகப் பிறந்தார். மலேசியா சென்று பினாங்கு நகரில் வணிகத் தொழிலில் ஈடுபட்டுள்ளார். தமிழார்வலரான இவர் மலேசியாவிலும் தமிழ்நாட்டிலும் பல இலக்கியத் தொடர்பான போட்டிகளில் கலந்துகொண்டு பரிசு பெற்றுள்ளார். பினாங்கு மாநில ஆளுநர் 16—7—78 இல் இவருக்கு பி.சே.கே. என்னும் அரசின் சிறப்பு விருது வழங்கியுள்ளார்.

திரு. அன்பானந்தம் வள்ளலார் நெறியைப் பின்பற்றி வாழ்பவர். ஆனைமுகன்—ஆறுமுகன் அந்தாதிகளும், மற்றும் சில கதை நூல்களும் எழுதியுள்ளார். மலேசியா, சிங்கப்பூர் தமிழர்களின் பாராட்டுக்குரியவராய் விளங்குகின்றார்.

### கழக நிலையங்களில் கிடைக்கும்

## பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| ஆயகலைகள் அறுபத்து நான்கு —புலவர் செந்துறை முத்து | 20 | 00 |
| தமிழியல் நோக்குநூல் அடைவு —பெ. மாதையன், எம்.ஏ. | 5 | 50 |
| தமிழ்ப் புதிர்கள்-ஓர் ஆய்வு—அரு இராமநாதன், எம்.ஏ. | 7 | 00 |
| சிலம்பில் அவலம் —கா. முத்துச்சாமி, எம்.ஏ., ஆ முத்தையா, எம்.ஏ. | 8 | 50 |
| மகாகவி பாரதி-ஒரு திறனாய்வு- விஜயபாரதி | 12 | 00 |
| பாரதியாரின் இலக்கியச் சோலை—டி. வி. எஸ். மணி | 5 | 00 |
| மாவீரன் நெப்போலியன்—அ. லெ. நடராஜன் | 12 | 50 |
| இலண்டனில் முருகன்—கிருபானந்தவாரியார் | 2 | 00 |
| அமுதும் தேனும் பாலும்—நா. ரா. நாச்சியப்பன் | 7 | 50 |
| சொல் புதிது சுவை புதிது—டாக்டர் இராம சுந்தரம் | 7 | 50 |
| ஞானத்தைத் தேடி (அ. இ. மதம் 9 ஆம் பாகம்) —கவிஞர் கண்ணதாசன் | 1 | 50 |
| அறுசுவை உணவை ஆக்கிப் பாருங்கள்—லட்சுமி மணி | 6 | 00 |
| நினைப்பது நடக்கும்—பி. சி. கணேசன் | 2 | 25 |
| அனுபவங்கள் தொடர்கின்றன—சிவசங்கரி | 4 | 00 |
| ஆந்திரநாட்டு அகநானூறு—இரா. மதிவாணன், எம்.ஏ. | 10 | 50 |
| 2000 பழமொழிகள்—அ. லெ. நடராஜன் | 4 | 50 |
| எழுத்தும் வாழ்க்கையும்—அகிலன் | 12 | 50 |
| உள்ளத்தைக் காப்பாற்று —வைத்தியமணி இரத்தின சண்முகனார் | 12 | 00 |
| தேனமுதம்—கவியழகன், எம்.ஏ. | 10 | 25 |
| உண்மையின் ரகசியம்—டி. கே. எம். அப்துல் ரசாக் | 2 | 00 |
| குறள்கண்ட நாடும் வீடும்—டாக்டர் தே. ஆண்டியப்பன் | 15 | 00 |
| சூரியன் மேற்கே உதிக்கிறான்—கோவி. மணிசேகரன் | 6 | 75 |
| ஆப்பிரிக்க கண்டத்தில் பல ஆண்டுகள்—லட்சுமி | 6 | 00 |
| பரிபாடலில் பழக்க வழக்கங்கள் —புலவர் செந்துறைமுத்து | 7 | 50 |
| கோதை வளவன்—டாக்டர் பொற்கோ | 7 | 00 |
| சிவப்பு நிலா—சூரியகாந்தன் | 4 | 00 |
| அயல் நாடுகளில் என் அனுபவங்கள் —சு. பாலச்சந்திரன், எம்.ஏ. | 9 | 00 |
| Studies in Arts and Science—A Felicitation Volume | 85 | 00 |
| Studies in Tamil Social linguistics—K. Karunakaran | 8 | 00 |

பதிவு எண் : M. 4899



அப்பர் அச்சகம், சென்னே-1.